# நாயன்மார் நகரத்தார் ஐவர்



அழ.சிதம்பரம் M.A., M.Litt, CAIIB
(உதவிப் பொதுமேலாளர் (ஓய்வு) இந்தியன் ஓவர்சீஸ் வங்கி
முன்னாள் சேர்மன், பாண்டியன் கிராம வங்கி)

# நாயன்மார்
# நகரத்தார் ஐவர்



அழ.சிதம்பரம் M.A., M.Litt., CAIIB

(உதவிப் பொதுமேலாளர் (ஓய்வு) இந்தியன் ஓவர்சீஸ் வங்கி
முன்னாள் சேர்மன், பாண்டியன் கிராம வங்கி)

விலை ரூ.20/-

முல்லை
பதிப்பகம்
323/10, கதிரவன்காலனி
அண்ணாநகர் மேற்கு, சென்னை 40
செல்.: 9840358301
e-mail: mullaipathipagam@yahoo.com

அக்டோபர் 2014

பேராசிரியர்.முனைவர் மகாகவி
**அர.சிங்காரவடிவேலன்(எ)அரசி**
8,மீனாட்சி அரங்கம், வ.உ.சி.தெரு,
கண்டனூர் - 630 104.
கைபேசி : 94420 48272

# அணிந்துரை

"அறுபத்து மூன்று நாயன்மார்களில் 'தனவணிகர்' என்னும் நகரத்தார் இனத்து நாயன்மார் ஐவர்" என்ற நூலை எழுதிய ஆசிரியர் உயர்திரு. அழ.சிதம்பரம் (எ) அழ.சி என்பவர்கள் அரசியாகிய அடியேனின் இனிய நண்பர். கண்டனூரில் பிறந்த எளியேனும் கடியாபட்டியில் பிறந்த அன்பர் உயர்திரு. அழ.சி அவர்களும் காரைக்குடி அழகப்பா கலைக் கல்லூரியில் சற்று முன்பின்னாகப் பயின்ற ஒரு சாலை மாணவர்கள். பயின்ற கல்லூரி ஒன்றாயினும் படித்த பாடம் வெவ்வேறாகும். எளியேன் இளங்கலையில் பொருளாதாரமும் முதுகலையில் தமிழும் பயின்றவன். அவர்கள் இருநிலையிலும் பொருளாதாரம் கற்றவர்கள். ஆனால் அழ.சி அவர்கள் மாணவப்பருவத்தில் கவிதை, கட்டுரைகள் எழுதிப் பரிசுபெறும் ஆற்றலைக் கருவிலே திருவாக அமைந்தவர்கள். இருவருமே மூதறிஞர், பெரும் பேராசிரியர், முனைவர். உயர்திரு. வ.சுப. அவர்களின் மாணவர்கள். படிப்பு நிறைவேறிய பிறகு இருவரும் மேற்கொண்ட பணி வெவ்வேறாகும். எளியேன் ஆசிரியர் பணி புரிந்தவன். அவர்கள் இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, பாண்டியன் கிராம வங்கி ஆகியவற்றில் வெவ்வேறு பதவிகளில் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்கள்.

திரு.அழ.சி.அவர்கள் நல்ல அன்பர், அறிஞர், பண்பாளர். அறிஞர்கள், பண்பாளர் அன்பர்கள் கூடும் விழாக்களில் தன்னால் இயன்ற அன்புச் சேவையினை முகமலர்ந்து செய்பவர்கள். எடுத்துக்காட்டாக திருவண்ணாமலை திருக்கார்த்திகை தீபத்திருநாள் சமயத்திலும், பூம்புகாரில் நடைபெறும் பட்டினத்தார் விழா நாட்களிலும் அன்பர்களுக்கு உணவுச்சீட்டு வழங்கல், அன்பர்கள் வழங்கும் மகமைப் பணங்களை வாங்கிக் கணக்கு எழுதுதல்,போன்ற சேவைகளைப் பொறுப்போடு விருப்பமுடன் செய்பவர்கள். மேலும் விழாக்காலங்களில் கூடும் அன்பர்களுக்குப் பயன்படும் வகையில் நூல்களை அச்சடித்து வழங்கும் இலக்கியத் தொண்டும் செய்பவர்கள்.

பட்டினத்தார் விழாவில் பட்டினத்தார் வரலாறு, பட்டினத்தார் பாடல்கள் ஆகிய நூல்களை எழுதிவழங்குவார்கள். எழுதிய நூல்களை எளியேனிடம் படிக்கத் தந்து அணிந்துரையும் வேண்டி என்னைப்

பெருமைப் படுத்துவார்கள். அந்த முறையில் இந்த ஆண்டு வழங்கவுள்ள நூலாக இந்நூலை எழுதி ஆயர்த்தப் படுத்துகிறார்கள்.

இந்நூல்அறுபத்துமூன்று நாயன்மார்களைக் கதை வரலாறாகப் பாடிஅமைத்த பெரியபுராணம், அதனைப் பாடிய சேக்கிழார் பெருமான், அந்நூலுக்கு முதல் நூலும் வழிநூலுமாகிய திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி ஆகியவை பற்றிப் பொதுவாகவும் நம்மினத்து நகரத்தார் ஐவரைப் பற்றிச் சிறப்பாகவும் கூறுகிறது. பிள்ளையார் சுழியோடு தொடங்கி மனம், மொழி,மெய் மூன்றாலும் சிவமயமாகத் தங்கள் வாழ்க்கையை நடத்தி வரும் நகரத்தார்களின் பெருமையை நிலைநாட்டும் அடியார்களின் ஐவர் வரலாற்றை அழகாகவும்,சுருக்கமாகவும் கூறுகிறது.

இந்நூலைப் படைத்த அன்பர் உயர்திரு அழ.சி.அவர்களும், அவர்களின் தமிழ்த்தொண்டும் வளரவும், பொதுத்தொண்டு தொடரவும், சிவத்தொண்டு விளங்கவும் தன் குடும்பத் தேவைகள் நிறைவேறவும் அருள் பொழிய வேண்டிச் சிவ பெருமானையும், ஆறுமுகப் பெருமானையும் வணங்கி வாழ்த்துகிறேன்.

திரு.அழ.சி. அவர்களின் குடிவிளங்க நல்லதொரு மகன்மைத் திருமகன் வாய்க்கவும் அத்திருமகனுக்குத் திருமகள் போன்ற தன் பேத்தியே துணையாக அமையவும் எம் பெருமான் முருகன் அருள் வழங்க வேண்டுமென்று என் வேண்டுகோளை அவன் திருவடிகளில் படைக்கிறேன்.

காலைத் தொழுதாலும் கந்தாஉன் கையிருக்கும்
வேலைத் தொழுதாலும் வேல்கழுவிக் - கால்வழியும்
பாலைத் தொழுதாலும் பாய்ந்துவரும் உன்மயிலின்
வாலைத் தொழுதாலும் வாழ்வு.

நன்றி

வாழ்க வையகம் ! வாழ்க வளமுடன் !

அன்பன்

**அர.சிங்காரவடிவேலன் (எ) அரசி**

01.07.2013
கண்டனூர்

# முன்னுரை

சிவன் கோவில்களில் உள்ளேசென்றவுடன் நாம் முதலில் வணங்குவது முதற்கடவுளான விநாயகரைத்தான். அதன்பின் இன்னும் உள்ளே சென்று சிவபெருமானையும், உமையம்மையையும், முருகனையும், பெருமாளையும் மற்றக் கடவுள்களையும் தரிசிக்கின்றோம்.

முதல்சுற்று வரும்பொழுது அங்கு நம் இடப்புறத்தில் வரிசையாகக் காட்சித் தரும் அறுபத்து மூன்று நாயன்மார்களைக் காண்கின்றோம், அவர்கள் ஒவ்வொருவரையும் நின்று நிதானமாகப் பார்த்துக் கும்பிடுவதில்லை. ஒட்டு மொத்தமாக அனைவரையும் கைகூப்பி வணங்கிக்கொண்டே- தற்கால நடையில் கூறவேண்டுமானால் 'டாட்டா' காட்டிக் கொண்டே - நடந்து செல்கின்றோம். ஆண்டு தோறும் நடக்கும் திருவிழாக்களில் இந்த அறுபத்துமூவரையும் பல்லக்கில் அமரவைத்துப் பவனிவரச்செய்கின்றோம்.இவ்வாறு நாம் வணங்கும் இந்த அறுபத்து மூன்று நாயன்மார்கள் யார்? அவர்கள் ஒவ்வொருவரின் பெயர் என்ன?, அவர்களின் வரலாறு என்ன? அவர்களைப் பற்றி விரிவாகக் கூறும் காப்பியம் எது? அந்தக் காப்பியத்தை நமக்குத் தந்தருளிய பெருமான் யார்?இந்த வினாக்களுக்கெல்லாம் ஓரளவு சுருக்கமான விடையும் விளக்கமும் இந்த நூலில் தரப்பட்டுள்ளன.

அரனின் அடியவர்களான இந்த அறுபத்துமூன்று நாயன்மார்களும் குலத்தாலும், மரபாலும், செய்தொழிலாலும், இறைவனை வழிபடும் முறையாலும் வேறுபட்டவர்கள். இவர்களில் வேளாளர், அந்தணர், வேதியர், தனவணிகர், வேந்தர், குறும் மன்னர், வேடர், இடையர், புலையர் என வெவ்வேறு குலத்தைச் சேர்ந்தவர்கள் உளர். ஆனாலும் சிவனடியார்களுக்கு வேறுபாடு பாராது தொண்டு செய்வதில் இவர்கள் எல்லாரும் ஒன்றுபட்டவர்கள். இவர்களில் ஐவர் தனவணிகர் என்ற நகரத்தார் குலத்தைச் சேர்ந்தவர்கள். அகரவரிசையில் இவர்கள்,

1. அமர்நீதி நாயனார்
2. இயற்பகை நாயனார்
3. கலிக்கம்ப நாயனார்
4. காரைக்கால் அம்மையார்
5. மூர்த்தி நாயனார்

இந்தத் தனவணிகர் ஐவரின் வாழ்க்கை வரலாறு இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டள்ளது. மேலே கண்ட அகரவரிசைப்படி அல்லாது நம் எல்லோருக்கும் தெரிந்தவரும் மிகவும் சிறப்புப்பெற்ற நாயன்மாருமான காரைக்கால் அம்மையாரை முதலாகக் கொண்டு இந்நூல் தொடங்குகிறது.

அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றைக் கூறும் காப்பியமான திருத்தொண்டர்புராணம் என்ற பெரியபுராணத்தின் பெருமையையும் இதன் மூலமான முதல் நூல்களைப் பற்றியும், இந்தக் காப்பியத்தை நமக்குத் தந்தருளிய அருண்மொழித் தேவர் என்ற சேக்கிழார் பெருமானின் சிறப்பையும் மக்கள் அறிந்து கொள்ள இந்த நூல் ஓரளவு துணைபுரியும் என்று நம்புகிறேன்.

என் வேண்டுகோளுக்கு இணங்கி அருமையான அணிந்துரையை நல்கிய நண்பர் பேராசிரியர் முனைவர் மகாகவி அர.சிங்காரவடிவேலன் (எ) அரசியாருக்கு என் உள்ளம் கனிந்த நன்றி.

இந்த நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த முல்லைப் பதிப்பகத்தாருக்கும் அதன் உரிமையாளர் திரு.மு. பழநியப்பன் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

கடியாபட்டி
01.07.2013

அழ.சிதம்பரம்
செல்: 9486612124

# உள்ளுறை

# சேக்கிழார் பெருமான்

அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றைக் கூறும் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தை எழுதியவர் அருண்மொழித்தேவர் என்ற சேக்கிழார் பெருமான் ஆவார், தொண்டைமண்டலத்தில் உள்ள குன்றத்தூர் என்னும் ஊரில் உலகுக்கு உணவு அளிக்கும் பெருமைமிக்க வேளாண்குடியில் சேக்கிழார் என்று அழைக்கப்பெறும் மரபில் பிறந்தார் சேக்கிழார்.சே+கிழார் = "சேக்கிழார்". சே என்றால் எருது,மாடு, ஆடு,முதலிய கால்நடைகளைக் குறிக்கும். கிழார் என்றால் உரிமையாளர். எனவே சேக்கிழார் என்றால் நிலம், ஆடு, மாடு, முதலியவற்றுக்கு உரிமையாளர் என்று பொருள். அவருக்குத் தாய் தந்தையர் இட்டபெயர் அருண்மொழித்தேவர். குடி விளங்கும் குலவிளக்காக அவதரித்ததால் அருண்மொழித்தேவருக்கு அவர் பிறந்த குடிப்பெயரான சேக்கிழார் என்ற பெயரே வழங்குவதாயிற்று. இவருடைய தம்பியின் பெயர் பாலறாவாயர்.

இளவயதிலேயே சேக்கிழார் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். அவருடைய அறிவாற்றலையும் திறமையையும் வியந்து பாராட்டிய அநபாய சோழ மன்னர் அவரைத் தம் முதலமைச்சராகப் பணியமர்த்தினார். முதலமைச்சராக மிகவும் திறமையுடன் பணியாற்றியதைப் பாராட்டிச் சோழமன்னர் அவருக்கு "உத்தமச் சோழன்" என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கினார்.

அநபாயன் என்னும் சிறப்புப் பெயர்கொண்ட குலோத்துங்கச் சோழனின் காலம் கி.பி.1133 முதல் 1150 வரை என்பது வரலாற்று ஆய்வாளர்களின் முடிவாகும். சேக்கிழார் அநபாயனின் காலத்தவர். ஆதலால் அவரது காலத்தைப் பன்னிரண்டாம் நூற்றாண்டு எனலாம். குறிப்பாகக் கூற வேண்டுமெனில் அவர் காலத்தைப் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்து பதிமூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி எனவும் கொள்ளலாம்.

தொண்டை வளநாட்டில் தோன்றிய சேக்கிழார் பெருமான் சோழவள நாட்டில் உள்ள திருநாகேச்சுவரம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானிடத்தில் அளவற்றஅன்பும் பக்தியும் உடையவராய் விளங்கினார்.

தாம் வைத்த அளவற்ற அன்பின் காரணமாகத் தான் பிறந்த ஊரான குன்றத்தூரிலே திருநாகேச்சுவரத்தில் உள்ளதுபோலக் கோவில் கட்டி மாட வீதிகளும் அமைத்துத் திருநாகேச்சுவரம் என்று பெயர் சூட்டி இறைவனை வழிபாடு செய்து வந்தார்.

# பெரிய புராணம் தோன்றிய வரலாறு

அநபாய சோழ மன்னனுக்கு "அபயன்" என்றும் குலோத்துங்கன் என்றும் பெயர்கள் இருந்தன. "சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன்" என்று சேக்கிழாரே கூறுகிறார். முதல் அமைச்சராகப் பணியாற்றும் பொழுது சோழ மன்னனிடத்தில் கவலைப்படக் கூடிய ஒரு பழக்கத்தைச் சேக்கிழார் கண்ணுற்றார். தமிழில் உள்ள ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று திருத்தக்கத்தேவர் இயற்றிய சீவக சிந்தாமணி என்ற காப்பியமாகும். திருத்தக்கத் தேவர் சமண மதத்தைச் சார்ந்தவர். சமணத் துறவிகள் இன்பத் துறையைப் பற்றிப் பாட முடியுமா என்ற கேள்வியை இதர மதத்தினர் எழுப்பிய போது "முடியும்" என்று திருத்தக்கத் தேவர் கூறினார். தன் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் இன்பச் சுவை நிறைந்த சீவக சிந்தாமணி என்னும் செந்தமிழ்க் காப்பியத்தை இயற்றினார். சிற்றின்பப் பகுதிகள் அமைந்த திருமணக் காப்பியமான சிந்தாமணிக் காப்பியத்தை அநபாய சோழன் படித்து மகிழ்ந்தான்.

இதைக் கண்ணுற்ற சேக்கிழார் பெருமான் மனவருத்தம் அடைந்தார். அரசனிடம் சென்று இம்மைக்கும் மறுமைக்கும் எவ்வித நன்மையும் அளிக்காத அவகதையான சிந்தாமணியைப் படிப்பதை விட்டு இம்மை, மறுமை இவற்றுடன் வீடு பேறு என்ற மும்மைக்கும் வழிகாட்டும் சிவகதையைப் படித்து முக்திக்கு வழிதேடுமாறு வேண்டிக் கொண்டார். அவருடைய வேண்டுதலைச் செவிமடுத்த அநபாய சோழன் "அமைச்சரே ! சீவக சிந்தாமணி அவகதை என்று கூறுகிறீர். அப்படி என்றால் அதற்கு மாற்றான பெருமை மிக்க சிவகதை யாதென்று" கூறுமாறு வேண்டினார்.

அதற்குச் சேக்கிழார் பெருமானும் "மன்னவா! திருவாரூரில் சமயக் குரவர் நால்வரில் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனார் "திருதொண்டத்தொகை" என்னும் நூலில் சிவனடியார்களான திருத்தொண்டர்களைப் பற்றிப் பதினோரு பாடல்கள் எழுதியுள்ளார். அந்தத் திருத்தொண்டத்தொகையை முதல் நூலாகக் கொண்டு திருநாரையூரைச் சேர்ந்த நம்பியாண்டார்நம்பி என்பவர் திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் நூலை எண்பத்தொன்பது பாடல்களில் வழி நூலாகப் பாடியுள்ளார். அவர் நூலில் திருத்தொண்டர்கள் ஆற்றிய தொண்டுகளையும் அதனால் அவர்கள் பெற்ற பேறுகளையும் அந்தாதி முறையில் விரிவாகக் கூறியுள்ளார். அவற்றைத் தாங்கள் படித்து இன்புறலாம்," என்று கூறினார்.

அதனைக் கேட்ட அநபாய மன்னனும் அந்தத் திருத்தொண்டர்களின் வரலாற்றை விரிவாகக் கூறியருள வேண்டினான். சேக்கிழாரும்

தொண்டர்களின் வரலாற்றை விரிவாகக் கூறினார். அதைக் கேட்டு மகிழ்ந்த மன்னன் தொண்டர்களின் பெருமையை உலகெலாம் உய்த்து உணரும் வகையில் ஒரு காப்பியமாகப் பாடித்தருமாறு சேக்கிழாரைக் கேட்டுக்கொண்டான்.

மன்னனின் வேண்டுகோளை ஏற்றுச் சேக்கிழார் பெருமானும் காப்பியம் பாடுவதற்காகத் தில்லையம்பதியை அடைந்தார். அங்குச் சிவகங்கையில் நீராடித் திருத்தொண்டர்களின் வரலாற்றை எழுதி முடிக்க ஏற்றதொரு அடியை எடுத்து வழங்குமாறு அம்பலவாணனின் அடியில் வீழ்ந்து வணங்கினார். அப்பொழுது வானில் "உலகெலாம்" என்ற உருவமற்ற ஒலியை இறைவன் எழுப்பினார். அங்கிருந்து ஆயிரங்கால் மண்டபத்தை அடைந்த சேக்கிழார் "உலகெலாம்" என்று இறைவன் எடுத்துக் கொடுத்த சொல்லையே முதலாக வைத்துத் திருத்தொண்டர் புராணத்தைப் பாடத்தொடங்கினார்.

உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

(உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் உள்ளத்தில் நினைத்து உணர்ந்து நாவினால் ஓதி வணங்குவதற்கு அரியவன்; மூன்றாம் பிறை நிலவையும் கங்கை நீரையும் தாங்கிய சடைமுடியுடையவன்; அளவில்லாத ஒளிமயமானவன்; தில்லைச் சிற்றம்பலத்தில் நடனமாடுபவன் ; அவன் மலர் போன்ற மென்மையான சிலம்பணிந்த திருவடிகளை வாழ்த்தி வணங்குவோம்.)

"உலகெலாம்" என்று தொடங்கும் பாடலை முதல் பாடலாக வைத்து மொத்தம் 4286 பாடல்களில் திருத்தொண்டர் புராணத்தைப் பாடிமுடித்தார். காவியம் நிறைவு பெற்றதைக் கேள்வியுற்ற அநபாய சோழனும் பெருமகிழ்வோடு தில்லைக்கு வந்து சேக்கிழாரின் திருவடிகளில் விழுந்து வணங்கினான். அதன் பின் எல்லாரும் திருச்சிற்றம்பலத்தை அடைந்தனர். அப்பொழுது "அரசே! யாம் 'உலகெலாம்' என்று அடியெடுத்து கொடுக்க அதை முதலாக வைத்துச் சேக்கிழான் திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்துள்ளான். இனித் திருத்தொண்டர்களின் பெருமையை அவன் விளக்கிக் கூறக் கேட்பாயாக" என்று வானில் ஓர் ஒலி எழுந்தது.

தில்லையம்பலவாணனின் சபை முன்னே திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றத் தொடங்கினார் சேக்கிழார் பெருமான். மன்னரும் மக்களும் அமர்ந்து ஆவலுடன் கேட்டனர். சித்திரைத் திங்கள் திருவாதிரை நாளில் தொடங்கப்பெற்ற விளக்கவுரை அடுத்த ஆண்டு சித்திரைத் திங்கள் திருவாதிரை நாளில் இனிதே நிறைவேறியது.

அரங்கேற்றம் நிறைவு பெற்றவுடன் அநபாய சோழமன்னனும் திருத்தொண்டர் புராணத்தைப் பட்டினால் சுற்றித் தங்கத் தட்டில் இட்டு

யானையின் தலையில் வைத்துச் சேக்கிழார் பெருமானையும் யானையின் மீது ஏற்றி அமரச் செய்தார். தானும் யானையின் மேல் ஏறிச் சேக்கிழாரின் பின்னால் அமர்ந்து அவருக்குத் தன் இருகைகளாலும் வெண்சாமரம் வீசினார்.

தில்லை நகரின் திரு வீதிகளில் யானை ஊர்வலம் வந்த பின் திருத்தொண்டர் புராணத்தைக் கனக சபையில் வைத்துச் சேக்கிழாருக்குத் "தொண்டர் சீர் பரவுவார்" என்ற பட்டத்தை அளித்து அநபாய சோழன் வணங்கினார். திருத்தொண்டர் புராணத்தைப் "பன்னிரண்டாம் திருமுறை" என்று கூறி அதற்குரிய செப்பேடு செய்து, தில்லைக் கூத்தன் சந்நிதியில் ஏற்று வித்தார்.



## பெரிய புராணத்தின் முதல் நூல்கள்

சேக்கிழார் எழுதிய திருத்தொண்டர் புராணம்என்ற பெரிய புராணம் முதல் நூலன்று. சுந்தரப் பெருமான் பாடிய திருத்தொண்டத் தொகைக்கும் இதன் வழிநூலான திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி எழுதிய திருத்தொண்டர் திருஅந்தாதிக்கும் வழிநூலாகும்

### திருத்தொண்டத் தொகை

திருவாரூர் தியாகராசப் பெருமான் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என அடியெடுத்துக் கொடுக்க நம்பியூரராகிய சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப் பெற்றது திருத்தொண்டத் தொகை. பதினோரு பாடல்களில் அறுபது நாயன்மார்களின் வரலாற்றைக் கூறுகின்ற இந்த நூல்தான் பெரியபுராணத்திற்கு முதல் நூலாகும். சுந்தரப்பெருமான் தமக்கு முன்வாழ்ந்த அறுபது நாயன்மார்களின் வரலாற்றையும், ரத்தினச்சுருக்கமாக, ஒவ்வொறு அடியார்க்கும் ஓர் அடிபாடி அடியேன் என்று கூறிப் பாடுகிறார். இந்தப் பாடல்களில் தொண்டர்களின் பெயர், ஊர் போன்ற செய்திகள் தவிற வேறு விரிவான விளக்கம் இல்லை. அடியார் செய்த செயல் ஒவ்வொரு அடியிலும் அடைமொழியாகக் கொண்டு திருத்தொண்டத்தொகை அமைந் திருக்கிறது. இந்த நூல் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

### திருத்தொண்டர் திருவந்தாதி

சுந்தரப்பெருமான் பாடிய திருத்தொண்டதொகையை முதல் நூலாகக் கொண்டு பதினோராம் நூற்றாண்டில் வந்த வழி நூல் தான் திருத்தொண்டர் திருவந்தாதி. இதை எழுதியவர் திருநாரையூர் பொல்லாப் பிள்ளையாரின் அருள்பெற்ற நம்பி ஆண்டார் நம்பிகளாவர்.எண்பத்தைந்து பாடல்களில் அந்தாதி முறையில் பாடப்பெற்ற இந்தநூலில் தொண்டர்களின் ஊர், பெயர், இவற்றுடன்

மற்றும் சில செய்திகளும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்த நூல் அறுபத்துமூன்று நாயன்மார்களைப் பற்றிக் கூறுகிறது.

சுந்தரர் தாம் எழுதிய திருத்தொண்டத் தொகையில் அறுபது தனியடியார்களைப் பற்றி மட்டும் தான் கூறுகிறார். திருத்தொண்டத் தொகையை முடிக்கும்போது தம்மையும் தம்பெற்றோரையும் குறிப்பிட்டுச் சொல்லி முடிக்கிறார். சுந்தரருக்குப் பின் திருத்தொண்டர் திருவந்தாதியை எழுதிய நம்பியாண்டார்நம்பிகள் சுந்தரர் பாடிய அறுபது நாயன்மார்களுடன் சுந்தரமூர்த்தி நாயனாரையும் அவர் தந்தையார் சடையநாயனாரையும் தாயார் இசைஞானியாரையும் சேர்த்து அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றைப் பாடினார்.

## திருத்தொண்டர் புராணம்

மேலே கூறிய இரண்டு நூல்களையும் முதல் நூலாகக் கொண்டு பன்னிரண்டாம் நூற்றாண்டில் அருண்மொழித்தேவர் என்ற சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர்புராணத்தைச் சார்பு நூலாகப் பாடினார். அறுபத்து மூன்று தனியடியார்கள் ஒன்பதுதொகையடியார்கள் ஆக ஏழுபத்தி இரண்டு தொண்டர்களின் வாழ்க்கை வரலாற்றை விரிவாக 2 காண்டங்கள்,13 சருக்கங்கள், 4286 பாடல்களில் பெரிய காப்பியமாக வடித்துள்ளார். திருத்தொண்டர் புராணம்தான் பெரிய புராணம் என்று வழங்கலாயிற்று.



## பெரிய புராணம் - பெயர்க்காரணம்

**சே**க்கிழார் தாம் எழுதிய காப்பியத்திற்குத் திருத்தொண்டர் புராணம் என்று தான் பெயர் வைத்தார். செங்கதிரவன் போல் இருள் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம் என்று அவரே பெயர் கூறுகிறார். ஆனால் வேறு எந்தக் காப்பியத்திற்கும் கிட்டாத பெரிய என்ற அடைமொழி திருத்தொண்டர் புராணத்திற்குக் கிடைத்துக் காலப்போக்கில் பெரியபுராணம் என்ற பெயரே வழக்கில் நிலைத்து நின்றது. அவ்வாறு நிலைபெறுவதற்குப் பல காரணங்கள் உள்ளன.

சேக்கிழார் பெருமானே தம் காப்பியத்தைப் "பெரிய கதை" - பெரிய புராணம் என்று மறைமுகமாகக் கோடிட்டுக் காட்டுகிறார். காப்பியத்தின் விநாயகர் வணக்கப் பாடலில் தம் நூலை மாக்கதை என்று கூறுகிறார்.

எடுக்கும் **மாக்கதை** இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்.

'**மாக்கதை**' என்றால் பெரிய புராணம் என்று தானே பொருள்படும்.

பெரியவர்களைப் பற்றிக் கூறும் நூல் பெரியபுராணம் ஆகும். "வீடு பேற்றைக் கொள் எனக் கொடுக்கும் இறைவன் உயர்ந்தவன். அதனைக் கொள்ளேன் என மறுக்கும் அடியவர்கள் அவனினும் உயர்ந்தவர்கள். அத்தகைய பெரியவர்களைப் பற்றிய புராணம் பெரியபுராணம்" என்று புலவர் ஞானப்பிரகாசம் கூறுகிறார் (சேக்கிழார் காட்டும் நன்னெறி.)

இந்நூலுக்குப் பெரிய புராணம் என்னும் பெயர் வழங்குவதற்குப் பலகாரணங்கள் இருப்பினும் சுந்தரரைப் 'பெரியோர்' என்று வெள்ளானைச் சருக்கம் பாடல் 18 ல் குறித்த வகையின்படிப் பெரியோர் புராணம் என்னும் தன்மையில் பெரியபுராணம் என்றும் கருதலாம் என்று கவிஞர் வ.த. இராம.சுப்பிரமணியன் எழுதுகிறார் (பெரிய புராணம் என்கிற திருத் தொண்டர்புராணம்.)

பிறவா யாக்கைப் பெரியோனான சிவபெருமானின் பெருமையை உலகுக்கு விளக்குவதால் பெரியபுராணம் என்ற பெயர் வழங்லாயிற்று.

ooo

## பெரிய புராணத்தின் சிறப்பு

பெரிய புராணத்தின் தலையாய சிறப்பு என்னவெனில் இந்த நூல் தமிழ் மண்ணையும் தமிழ் மாந்தரையும் நிலைக்களனாகக் கொண்டு தமிழ் மொழியிலேயே தோன்றிய காப்பியமாகும். முழுக்க முழுக்கத் தமிழில் தோன்றிய முதல் வரலாற்றுக் காப்பிய நூலாகும். தமிழ்மொழியில் உள்ள மற்ற புராணங்களையும் இதிகாசங்களையும் போன்று பிறமொழிகளில் இருந்து மொழி பெயர்க்கப்பட்டது அன்று. வால்மீகி முனிவர் வடமொழியில் எழதிய நூலைத் தன்னுடைய இராமாயணக் காப்பியத்தின் கருவாகக் கொண்டார் கம்பர். திருவெண்ணெய் நல்லூரில் இருந்து கொண்டு தொலைதூரத்தில் இருந்த கோசலை நாட்டைப் பற்றியும் இராமனைப் பற்றியும் பாடினார் கம்பர். அதே போன்று வியாச முனிவர் வடமொழியில் எழுதிய மகாபாரதத்தைத் தமிழில் வடித்த வில்லிபுத்தூர் ஆழ்வார் வடநாட்டில் இருந்த அஸ்தினாபுரத்தையும், பாண்டவர்களையும் கவுரவர்களையும் பற்றிப் பாடினார். ஆனால் சேக்கிழார் பெருமானோ தமிழ் மொழியை மூலமாகக் கொண்டு தமிழ்நாட்டில் வாழ்ந்த நாயன்மார்களின் வரலாற்றைக் கூறும் தமிழ்க்காப்பியத்தைப் படைத்தார்.

தமிழில் தோன்றிய பெரியபுராணக் காப்பியம் வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. "உபமன்னியு பக்த விலாசம்" என்ற பெயரில் வடமொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இந்த வகையில் தமிழ் மொழியிலிருந்து வடமொழிக்குச் சென்ற காப்பியம் என்ற பெருமையைப் பெரியபுராணம் பெறுகின்றது.தெலுங்கு,கன்னடம், மராத்தி மற்றும் ஆங்கில மொழியிலும் பெரியபுராணம் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

பெரியபுராணம் பெருங்காப்பியக் கூறுகள் அனைத்தும் ஒருங்கே அமைந்த ஒரு பக்திக் காப்பியம் ஆகும். அடிப்படையில் ஒரு சைவ சமயக் காப்பியமாக இருந்தாலும் அக்கால மக்களின் வாழ்க்கை முறைகளையும் வாழ்வியல் நெறிகளையும் இறைத் தொண்டினையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த அடியவர்களின் வரலாறு வாயிலாகக் கூறும் ஒரு வரலாற்றுக் காப்பியமாகும். இதையே முனைவர் சரளாஇராசகோபாலன் அவர்களும் சேக்கிழார் எழுதிய பெரிய புராணம் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் வாழ்வியல் காப்பியம் என்றும் இறைவன் எழுந்தருளிய திருத்தலங்களைப் பற்றியும் திருத்தொண்டர்கள் பிறந்த நாட்டினைப் பற்றியும் எடுத்துக் கூறும் வரலாற்றுக் காப்பியம் என்றும் கூறுகிறார் (சமயம் வளர்த்த தமிழ்).

அடியவர்களின் வரலாற்றைப் பக்திச்சுவை சொட்டப் பாடியுள்ளமையால் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் "பக்தி சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவன்" என்று சேக்கிழாரைச் சிறப்பித்துக் கூறுகிறார். பெரியபுராணம் ஒரு உலகப் பொதுமறை என்பது மூதறிஞர் தெ.பொ.மீனாட்சி சுந்தரனாரின் முடிவு.

பெரிய புராணத்தின் இன்னுமொரு சிறப்பு யாதெனின் அது திருத்தொண்டர்களின் பக்தி நெறியையும் அவர்கள் சிவனடியார் களுக்குத் தொண்டு செய்வதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்ததையும் முன்னிலைப் படுத்துகிறது. தமிழில் தோன்றிய மற்ற காப்பியங்கள் புராணங்கள் எல்லாம் பக்தர்களுக்கு அருள்செய்யும் இறைவனின் பெருமையைப் பறைசாற்றினவே அன்றிப் பக்தர்களின் பெருமையைக் கூறவில்லை. ஆனால் பெரியபுராணம் ஒன்றுமட்டும் தான் முழுக்க முழுக்கப் பக்தர்களின் - அடியவர்களின் - பெருமையை உலகுக்கு எடுத்துக் கூறுகிறது.

பெரியபுராணம் பெண்மைக்குச் சிறப்பிடம் கொடுக்கிறது. ஆண்கள் மட்டுமே அடியவராய் வாழ்ந்து முக்தி பெற முடியும் என்பதை மாற்றிப் பெண்டிரும் அடியவர்களாகிப் பேறு பெறலாம் என்ற உண்மையை உலகுக்கு உணர்த்தியது பெரிய புராணம். இசைஞானியார், புனிதவதியார் என்ற காரைக்கால் அம்மையார் மற்றும் மங்கையர்க்கரசியார் என்று மூன்று பெண்பால் அடியவர்களின் பெருமைகளை இந்நூல் எடுத்துக் கூறுகின்றது.

பெரியபுராணத்தின் மற்றுமொரு சிறப்பு அதன் தொடக்கப் பாடலில் காணலாம். "உலகெலாம்" என்று உமையொருபாகன் அடியெடுத்துக் கொடுத்துச் சேக்கிழார் பாடிய தொடக்கப்பாடல்களின் எழுத்துக்கள் எண்ணிக்கையில் அடியவர்களின் எண்ணிக்கை வெளிப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| உலகெலா முணர்ந் தோதற் கரியவன் | - | 16 எழுத்துக்கள் |
| நிலவு லாவிய நீர்மலி வேணிய | - | 13 எழுத்துக்கள் |
| னலகில் சோதிய னம்பலத் தாடுவான் | - | 16 எழுத்துக்கள் |
| மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம் | - | 18 எழுத்துக்கள் |
| | | 63 எழுத்துக்கள் |

மேற்கண்ட பாடலில் 63 எழுத்துக்கள் தனியடியார்களான 63 நாயன்மார்களைக் குறிப்பன. மேலே உள்ள பாடலைப் பதம் பிரித்து எழுதினால்72 எழுத்துக்கள் வரும். இவை 63 தனியடியார்களையும் 9 தொகையடியார்களையும் சேர்த்து 72 பேர்களைக் குறிக்கிறது.

"உலகெலாம்" என்ற சொல்லால் பெரியபுராணக் காப்பியத்தைத் தொடங்கிய சேக்கிழார் அதே "உலகெலாம்" என்ற சொல்லினை இடையிலும், இறுதியிலும் வைத்துக் காப்பியத்தை நிறைவு செய்கிறார்.

"மன்றுளார் அடியார் அவர் வான்புகழ்
நின்றதெங்கும் நிலவி உலகெலாம்"

என்பது இறுதிப் பாடல்.



## அடியார்கள் பெருமை

**சே**க்கிழாரின் பெரியபுராணம் ஆறு சூடிய ஐயனுக்குத் தொண்டு செய்யும் நீறு பூசிய அடியவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், பக்திப் பெருக்கையும் தொண்டு மனப்பான்மையையும் விளக்கிக் கூறுகின்றது. அடியார்களின் காலம் கி.பி. முதல் நூற்றாண்டு தொடங்கிச் சுந்தரப் பெருமான் வாழ்ந்த எட்டாம் நூற்றாண்டு வரை என்று கொள்ளலாம்.

பக்தி என்பது பொதுவானது. அது எந்த ஒரு தனிமனிதருக்கோ அல்லது ஒரு குறிப்பிட்ட குலத்திற்கோ இனத்திற்கோ உரியது அன்று. அது எல்லார்க்கும் உரியது. குலம் - இனம் - செய்தொழில், ஆண் - பெண் - அரசன் - ஆண்டி, உயர்ந்தவர் - தாழ்ந்தவர் என்ற வேறுபாடு களையும், பாகுபாடுகளையும் கடந்தது.அந்தணர், புலையர், வண்ணார், குயவர், வணிகர், சக்கிலியர், உழவர், சைவர், புலால் உண்பவர்- இவர்கள் எல்லாரையும் சேக்கிழாரின் பெரியபுராணம் ஒன்றாக இணைத்து வேறுபாட்டுக்கிடையில் ஒன்றுபட்டதொரு சமுதாயத்தை உலகுக்கு விளக்குகிறது.

பெரிய புராணத்தில் வரும் 63 நாயன்மார்களும் குலத்தாலும், மரபாலும், செய்தொழிலாலும் இறைவனை வழிபடும் முறையாலும் வேறுபட்டவர்கள். ஆனால் அவர்கள் அனைவரும் ஆண்டவனின் அடியவர்களுக்குத் தொண்டு செய்வதில் ஒன்றுபட்டவர்கள். ஆதி அந்தம் இல்லா ஆனந்தக் கூத்தனின் அடியவர்களுக்குத் தொண்டு செய்வதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டவர்கள்.

"கைத்திருத்தொண்டு செய் கடப்பாட்டினர்" என்று நாயன்மார்களின் சேவை மனப்பான்மையைச் சேக்கிழார் புகழ்ந்துரைப்பார்.

இல்லற வாழ்கையில் இருந்து கொண்டே இறைவன் மேல் கொண்ட பக்தியால் துறவற வாழ்க்கை வாழ்ந்த தூயவர்கள். சித்தத்தைச் சிவன்பால் வைத்து அவன் சேவடி போற்றும் உத்தமர்களான அடியவர்கள் ஓட்டையும் செம்பொன்னையும் ஒன்றாக நோக்கியவர்கள்.

வீடு பேறு அடைவதைவிட அடியவர்களுக்குத் தொண்டு செய்வதிலேயே மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள் நாயன்மார்கள். இறைவனிடம் அவர்கள் எதையும் வேண்டும் என்று கேட்டதில்லை. குறிப்பாகக் கூற வேண்டுமானால் அவர்கள் முக்தியை விடப் பக்தியைப் பெரிதாக எண்ணியவர்கள். இதையே சேக்கிழாரும் கூடும் அன்பில் கும்பிடலே இன்றி வீடும் வேண்டா விரலின் விளங்கினார் என்று கூறுகிறார்.

குலவேறுபாடு கருதாமல் அடியவர்கள் அனைவரையும் ஒரே குலமாகக் கருதினார் சேக்கிழார் என்பதை அவர் ஐயர் என்ற சொல்லைப் பயன்படுத்திய முறையினால் தெரிந்து கொள்ளலாம். பழங்காலத்தில் தமிழ் நாட்டில் "ஐயர்" என்ற சொல் சான்றோரைக் குறிப்பதற்கு மட்டும் தான் பயன்படுத்தப்பட்டது. நாளடைவில் அது ஒரு குறிப்பிட்ட குலத்தினரைக் குறிக்கும் சொல்லாகக் கையாளப்படலாயிற்று. ஆனால் சேக்கிழார் தம் நூலில் "ஐயர்" என்னும் சொல்லை ஒரு குறிப்பிட்ட குலத்தினரை மட்டும் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தாது அதன் உண்மையான உயரிய பொருளில் பல இடங்களில் பயன்படுத்துகிறார்.

அரனை ஐயர் என்று குறிப்பிடும் சேக்கிழார் அதே சமயம் தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்த கண்ணப்பநாயனார் (வேடுவர் குலம்), திருநாளைப்போவார் நாயனார் (நந்தனார் என்ற புலையர் குலம்), திருநீலகண்ட நாயனார்( பாணர்குலம்) ஆகிய மூவரையும் ஐயர் என்று அழைத்து அவர்களுக்குப் பெருமை சேர்க்கிறார். இன்னும் சொல்லப் போனால் உயர்ந்த குலத்தைச் சேர்ந்த எவரையும் அவர் ஐயர் என்று குறிப்பிடவில்லை. எடுத்துக்காட்டாக, பிறப்பால் அந்தணராகிய திருஞான சம்பந்தரைச் சேக்கிழார் ஒருமுறை கூட ஐயர் என்று அழைக்கவில்லை. இதற்கு மாறாக அந்தணரான திருஞானசம்பந்தரையே தாழ்ந்தகுடியில் பிறந்த திருநீலகண்டரை ஐயரே என்று இரண்டு இடங்களில் அழைக்குமாறு செய்கிறார்.

"ஐயரே உற்ற இசை அளவினால் நீர்" (திருஞான 450)
"ஐயர் நீர் யாழிதனை முறிக்கு மாதென்" (திருஞான 451)

(சைவ சமய ஆச்சார்யர்களான நால்வரில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவரின் வாழ்க்கை வரலாறு மட்டும்தான் பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ளது. நான்காவது ஆச்சார்யரான மாணிக்கவாசகரைப் பற்றி எவ்விதக் குறிப்பும் இல்லை. ஒருவேளை மாணிக்கவாசகர் சுந்தரர் காலத்திற்குப் பிற்பட்டவராக இருக்கலாம் என்று கருதத்தோன்றுகிறது.)

இனி நகரத்தார் ஐவர் வரலாற்றை காண்போம்.

# காரைக்கால் அம்மையார்

பெரிய புராணத்தில் வரும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் பெண்பால் அடியவர் மூவர்.அவர்களில் ஒருவர் புனிதவதியார் என்ற காரைக்கால் அம்மையார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் புனிதவதி. கயிலையம் பதியில் தலையால் நடந்து வரும் இவரைக்கண்ட சிவபெருமான் "அம்மையே" என்று அழைத்ததால், பிறந்த ஊர்ப் பெயரான காரைக்காலுடன் அம்மையாரையும் சேர்த்துக் காரைக்கால் அம்மையார் என்ற இயற் பெயர் வழங்கலாயிற்று. பேரழகுடன் திகழ்ந்த புனித வதியார், கணவனால் கைவிடப்பட்டவுடன் தம் அழகு உடலை வெறுத்து ஒதுக்கி இறைவனிடம் வேண்டிப் பேய் உருவைப் பெற்றதனால் பேயார் என்று சுந்தரமூர்த்தி நாயனாரால் அழைக்கப்பட்டார் (பேயார்க்கும் அடியேன்.)

## 1.காரைக்கால் நகர்

கடல் வாணிபத்தில் சீரும் சிறப்பும் மிகுந்து விளங்கியது காரைக்கால் துறைமுகப்பட்டினம். காரைக்கால் நகரத்தின் சிறப்பை "வளம் பெறு திருக்காரைக்கால்" "மாமலி காரைக்கால் வள நகர்" "காரைக்கால் பதி" எனப் பல வகையில் சேக்கிழார் பாடியுள்ளார். இந்தப்பெருமை மிக்க மாநகரில் தனவணிகர்கள் செல்வச் சிறப்போடும் குலப் பெருமையோடும் வாழ்ந்து வந்தனர். அவர்கள் அறநெறி பிறழாத சிவநெறியாளர்கள். உண்மையை உயிரினும் மேலாகக் கடைப்பிடிப்பவர்கள். குலப்பெருமைக்கு உரிய மானம், தர்மம், வாய்மை என்ற மூன்று குணங்களையும் போற்றிக்காத்து வாழ்ந்து வந்தனர்.

"மானமிகு தருமத்தின் வழி நின்று வாய்மையில்
ஊனமில் சீர்ப் பெருவணிகர்"

என்று தனவணிகர்களின் குலப்பெருமையைச் சேக்கிழார் பெருமான் கூறுகிறார்.

## 2.புனிதவதியாரின் குழந்தைப் பருவம்

காரைக்கால் மாநகரில் வணிகர்குலத் தலைவனாகத் தனதத்தன் விளங்கினான். அவன் செய்த தவத்தால் திருமடந்தையே வந்து அவதரித்தார் என்று பெருமைப்படும் வண்ணம் அழகு மிக்க புனிதவதியார் மகளாக பிறந்தார். குழந்தைப்பருவத்திலேயே தோற்றத்தில் மயில் போலவும் குரல் இனிமையில் குயில் போலவும்

இருந்தார் என்பதை "மயிலைப் புறங்கொள் மென்சாயல் மகளிர் கிளவி யாழி னொடும்" என்ற சேக்கிழார் பாடல் வரிகளில் தெரிந்து கொள்ளலாம்.

பிள்ளைப் பருவம் முதற் கொண்டே புனிதவதி இறைவன் மேல் நீங்காத பக்தி உடையவராய் விளங்கினார். மணலில் சிவலிங்கம் அமைத்து மலர்களாலும் பச்சிலைகளாலும் பூசை செய்து விளையாடுவார். வண்டல் பயில்சிறுவயது முதலே அன்பர் பிரானின் அடியவர்க்குத் தொண்டு செய்யும் பழக்கத்தைப் புனிதவதியார் கொண்டிருந்தார் (பெரிய புராணம் பாடல் 1721). அடியவர்கள் வந்தால் அவர்களைத் தொழுது வணங்குவார். "விளையும் பயிர் முளையிலே" என்ற பழமொழிக்கு இலக்கணமாகத் திகழ்ந்தார்.

சிறுவயது முதல் சிவத்தொண்டு ஒன்றையே சிந்தையில் கொண்டிருந்ததை

"பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்து நின்சேவடியே சேர்ந்தேன்"

என்று அம்மையாரே அவர் பாடிய "அற்புதத் திருவந்தாதி" என்னும் நூலில் முதல் பாடலிலே கூறுகிறார். நான் பேசத்தொடங்கிய காலம் தொட்டு உன்மேல் பேரன்பு கொண்டு உன் திருவடியை வணங்கி வருகிறேன் என்பது பாடலின் பொருள்.

## 3. இளமைப் பருவம்

தம் தோழியருடன் மண்ணில் வீடுகட்டி மகிழ்ந்து விளையாடிய பருவத்தைத் தாண்டி, அழகுப் பதுமையாக வளர்ந்த புனிதவதி பூப்பெய்தித் தன் மணப் பருவத்தை அடைந்தார். இந்தப் பருவத்தைச் சேக்கிழார் பெருமான் "இல்லிகலாப் பருவம்" என்று கூறுகிறார். இல்லிகலாப் பருவம் என்றால் வீட்டை விட்டு வெளியே செல்லாத பருவம் என்ற பொருள். தனவணிகர் தங்கள் குல மரபுப்படி பருவம் எய்திய பெண்களை வீட்டைவிட்டு வெளியே செல்ல அனும திக்கமாட்டார்கள். பெண்கள் இந்தப் பருவத்தை அடைந்தவுடன் அவர்களுக்குத் திருமணம் பேசத்தொடங்கிவிடுவார்கள். குலமரபின்படி தனதத்தனும் தன் அருமைச் செல்வி புனிதவதியின் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினான்.

## 4.திருமணம் பேசுதல்

காரைக்காலைப் போலச்சிறப்புடன் விளங்கிய மற்றுமொறு துறைமுகப் பட்டினம் நாகப்பட்டினமாகும். அங்கு புகழும் செல்வமும் நிறைந்த நிதிபதி என்னும் வணிகன் வாழ்ந்தான். அவனுக்குத் திருமணவயதில் பரமதத்தன் என்று ஒரு மகன் இருந்தான். தன் மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியை மணம் பேசி முடிப்பதற்காக வணிகர் குலப் பெரியோர்களைக் காரைக்காலுக்கு அனுப்பிவைத்தான்.

"நீடியசீர் கடல் நாகை நிதிபதி என்று உலகின்கண்
பாடுபெறு புகழ்வணிகன் பயந்த குலமைந்தனுக்குத்
தேடவரும் திருமரபில் சேயிழையை மகட்பேச
மாடமலி காரைக்கால் வளநகரில் வரவிட்டார்."

(பெ.பு.1723)

நாகையிலிருந்து காரைக்காலுக்கு வந்த பெரியோர்கள் தனதத்தனைச் சந்தித்துப் புனிதவதியை நிதிபதியின் மகன் பரமதத்தனக்கு "முந்தை மரபினுக்கு ஏற்கு முறையில்" மணம்புரிந்து தருக என்று கேட்டனர். அதற்குத் தனதத்தனும் இசைவு தெரிவிக்கப் பெரியோரும் நாகைக்குத் திரும்பிச்சென்று நற்செய்தியை நிதிபதிக்குத் தெரிவித்தனர். உற்றவர்கள் உரைகேட்ட நிதிபதியும் உள்ளம் உவந்து திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான்.

## 5.திருமண ஏற்பாடுகள்

மணமகன் வீட்டினர் திருமண நாளைக் குறித்து மணமகள் வீட்டிற்கு மண மங்கல ஓலை அனுப்பினர். மங்கல ஓலையைப் பெற்றபெண் வீட்டாரும் தனவணிகர் குல முறைப்படித் திருமணமும் மணப்பெண் இல்லத்தில் நடைபெற வேண்டும் என்ற நியதிப்படித் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் காரைக்காலில் மணமகள் வீட்டில் செய்தனர். பரமதத்தனுக்கு மாப்பிள்ளைக்கு உரிய அலங்காரங்களைச் செய்து மேள தாளத்தோடு சுற்றத்தார் சூழ மாப்பிள்ளை வீட்டார் காரைக்காலுக்கு வந்து சேர்ந்தனர்.

## 6.திருமண நிகழ்ச்சி

மணமகளின் தந்தை தனதத்தனின் மாடமாளிகையில் சுற்றத்தார் முன்னிலையில் மறை நூல்களில் கூறியுள்ளபடி திருமணச் சடங்குகளைச் செய்து, தளிர்போன்ற மென்மையான அடிகளையுடைய மயில்போன்ற தோற்றத்தைக் கொண்ட புனிதவதியை மாலை சூடிய காளை போன்ற பரமதத்தனுக்குக் கல்யாணம் செய்தனர்.

அளிமிடைதார்த் தனதத்தன் அணிமாடத்துள் புகுந்து
தெளிதருநூல் விதிவழியே செயன்முறைமை செய்தமைத்துத்
தளிர்அடிமென் நகைமயிலைத் தாதுஅவிழ்தார்க் காளைக்குக்
களிமகள் சுற்றம் போற்றக் கலியாணம் செய்தார்கள்.

(பெ.பு.1727)

உலகநியதிப்படி மயிலுக்கும் மயிலுக்கும் தான் திருமணம் நடக்கும். அதே போன்று காளைக்கும் கிடேரிக்கும் தான் திருமணம் நடக்கவேண்டும். காளைக்கும் மயிலுக்கும் திருமணம் என்பது பொருந்தாத ஒன்று. பரமதத்தனுக்கும் புனிதவதிக்கும் நடந்த திருமணம் ஒரு பொருந்தாத் திருமணம் என்றும் அவர்கள் மணவாழ்க்கை குறுகிய கால அளவிலேயே முறிவடையப் போகிறது என்பதையும் முன் கூட்டியே

சேக்கிழார் பெருமான் மேலேகண்ட பாடலில் உவமை வாயிலாகக் கோடிட்டுக் காட்டுகிறார்.

## 7. வேறு வைத்தல்

தனதத்தனுக்கு ஒரே மகள் புனிதவதி. வேறு குழந்தைகள் இல்லை. எனவே மகளைப்பிரிய மனம் இல்லாத தனதத்தன் திருமணத்திற்குப் பின் மணமக்களை நாகப்பட்டினத்திற்கு அனுப்ப மனமில்லாமல் காரைக்காலிலேயே அவர்கள் இல்லறம் நடத்த அழகிய மாளிகையை அமைத்துக் கொடுத்தான்.அந்த மாளிகையில் அவர்கள் தனிக் குடித்தனம் நடத்துவதற்குத் தேவையான செல்வங்களை அளவின்றி அள்ளிக் கொடுத்து வேறு வைத்தான். பரமதத்தனும் குலமரபுப்படி வாணிபம் செய்து பொருள் திரட்டி இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டான்.

## 8.அடியார்களுக்குப் பணிவிடைசெய்தல்

இறைவனிடத்தில் இடைவிடாத பக்தி உடையவராய் இருந்தாலும் புனிதவதியார் மனையறத்தின் மாண்பு குறையாது கணவனுடன் மனம் ஒத்து இல்லற வாழ்க்கையை நடத்திவந்தார். அவர் தன்னுடைய கடவுள் பக்தி இல்லறத்திற்கு எவ்வகையிலும் இடையூராக இல்லாதவாறு பார்த்துக் கொண்டார்.

சிவபெருமானின் அடியவர்களுக்குப் பணிவிடை செய்வதையும் ஒரு சிறந்த மனையறமாக மதித்துப் புனிதவதியார் போற்றி வாழ்ந்தார். தம் இல்லத்தை நாடி வரும் அடியவர்களுக்கு நல்ல சுவையுள்ள அமுதளித்துச் செம்பொன்னும் நவமணியும், செழுந்துகிலும் கொடுத்து அவரவர்களுக்குத் தேவையானவற்றையும் அவரவர் தகுதியறிந்து அளித்து இறைமணம் தேடி இல்லறத்தொண்டு புரிந்து வந்தார்.

நம்பர் அடியார் அணைந்தால் நல்லதொரு அமுதளித்துச்
செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் முதலான
தம்பரிவினால் அவர்க்குத் தகுதியின் வேண்டுவ கொடுத்தும்
உம்பர் பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக ஒழுகும் நாள்

(பெ.பு.1731)

## 9. பரமதத்தன் மாங்கனிகள் அனுப்பி வைத்தல்

ஒருநாள் பரமதத்தன் கடைக்கு வந்த நண்பர்கள் சிலர் இரண்டு மாங்கனிகளை அவனிடம் கொடுத்தனர். வந்தவர்களின் குறை தீர்த்து அவர்களை அனுப்பிய பின் அந்த இரண்டு மாங்கனிகளையும் அவன் இல்லத்தில் கொண்டு போய்க் கொடுக்கும்படி வேலையாட்களிடம் கொடுத்தனுப்பினான். "ஈங்கிவற்றை இல்லத்துக் கொடுக்க" (1732) என இயம்பினான். ஏவலரும் பரமதத்தனின் இல்லத்திற்குச் சென்று மாங்கனிகளைப் புனிதவதியாரிடம் கொடுத்தனர்.

## 10. சிவனடியார் வருதல்

கணவன் கொடுத்து அனுப்பிய இரண்டு மாங்கனிகளையும் வாங்கிய புனிதவதியார் அவற்றை உள்ளே கொண்டு போய் வைத்தார். அப்பொழுது படமெடுத்தாடும் பாம்பினை அணிகலனாகப் பூண்ட சிவபெருமானின் திருத்தொண்டர் ஒருவர் மிகுந்த பசியோடு வீட்டிற்குள் வந்தார்.

பசிக் களைப்புடன் படியேறிவரும் அடியவரைப் பார்த்த உடனே அவர் பசிதீர்க்க வேண்டுமென்று புனிதவதியார் எண்ணிச் செயல்படத் தொடங்கினார். அடியாரை வரவேற்று மனையுள் அழைத்துவந்து அவருடைய திருவடிகளை நீர் விட்டுத் தூய்மை செய்து, தட்டு வைத்து உணவு படைக்க முற்பட்டார்.

அடியவர் வந்து சேர்ந்த அந்த நேரத்தில் அம்மையாரின் வீட்டில் சோறு மட்டுமே சமையல் ஆகி இருந்தது.மற்ற காய்கறிகளை இனிமேல் தான் சமைக்கவேண்டும். அடியவரோ மிகுந்த பசியோடு இருக்கிறார். இதற்கு மேலும் காலம் கடத்துவதற்கு அவர் நிலைமை இடம் கொடுக்காது. காய் கறிகள் இல்லாமல் வெறும் சோற்றை மட்டும் அளிக்க முடியாது.என்ன செய்வது என்று எண்ணிய புனிதவதியாருக்கு அவர் கணவன் கொடுத்தனுப்பிய இரண்டு மாங்கனிகள் நினைவிற்கு வந்தன. மனத்தில் கவலை நீங்கியவராய் ஒரு மாங்கனியை எடுத்து வந்தார்.அதை வைத்து அடியார்க்கு அமுது படைத்தார்.

கடும் பசியினால் ஏற்பட்ட களைப்பும், வயது மூப்பினால் வந்த உடல் தளர்ச்சியும் ஒன்றாகக் கூட்டணி வைத்ததால் வாடிய நிலையில் இருந்த திருத்தொண்டராகிய சிவனடியார் திலகவதியார் இட்ட அன்னத்தைச் சுவைமிக்க மாங்கனியோடு சேர்த்து உண்டு பசியும், களைப்பும் தீர்ந்து மன நிறைவோடு அம்மையாரை வாழ்த்தி அருளாசி வழங்கிச் சென்றார்.

மூப்புறும் அத்தளர் வாலும் முதிர்ந்து முடுகிய வேட்கைத்
தீப்பசியின் நிலையாலும் அயர்ந்து அணைந்த திருத்தொண்டர்
வாய்ப்புறு மென்சுவை அடிசில் மாங்கனியோடு இனிது அருந்தி
பூப்பயில் மென்குழல் மடவார் செயல் உவந்து போயினார்

(1737)

## 11. பரமதத்தன் உணவு உண்ண வருதல்

காலைப் பொழுதில் திருத்தொண்டர் உணவருந்திச் சென்றார் . அதன் பின் மதியம் வந்ததும் பரமதத்தன் இல்லத்திற்கு வந்தான். வழக்கம் போல் நீராடி ஆடைமாற்றி உணவு அருந்த உட்கார்ந்தான். கற்பின் மிக்க புனிதவதி அம்மையாரும் கணவனுக்கு உணவளிக்கத் தொடங்கினார்.

தான் சமைத்த காய்கறிகளுடன் இன் சுவை உணவைக் கணவனுக்கு இட்ட பின் அவன் அனுப்பிய இரண்டு மாங்கனிகளுள் அடியவர்க்கு அளித்த பின் எஞ்சி இருந்த மற்றொரு மாங்கனியைக் கொண்டு வந்து உணவுத் தட்டில் வைத்தார்.மனைவி படைத்த மதுரம் மிகுந்த மாங்கனியை உண்டு அதன் இனிய சுவையில்மயங்கிய பரமதத்தன் "இதைப் போல் இன்னொருபழம் இருக்குமே அதனையும் கொண்டு இடுக" எனக் கூறினான்

இதைக் கேட்டதும் எந்தவிதமான உணர்வினையும் வெளிப்படுத்தாத புனிதவதியார் "அனையது தாம் கொண்டுவர அணைவார் போல் அங்ககன்றார்" (1740). "கணவன் கேட்டதை இல்லை" என்று கூறுவது மனைவிக்கு முறையன்று. அதே சமயம் அவன் கேட்ட மற்றொரு கனியை அடியவருக்கு வழங்கிவிட்டதால் அதை அவனுக்குக் கொடுக்கவும் இயலாது. என் செய்வது? இறைவன் விட்ட வழி நடக்கட்டும் என்று மனத்தில் எண்ணி மருகி அவ்விடத்தை விட்டு அகன்று உள்ளே சென்றார்.

## 12.கயிலை மன்னன் கனி அளித்தல்

உள்ளே சென்ற புனிதவதியாரின் உள்ளம் பலவிதப் போராட்டங்களில் உழன்றது.கனியில்லை என்று சொல்லவும் முடியாமல், மற்றொரு கனியைக் கொண்டு செல்லவும் முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பின் நிலைக்கு ஆளானார். ஆண்டவன் அடியவர்களை நீண்ட நேரம் கலங்க விடுவதில்லை. "உற்றவிடத்து உதவும் விடையவர் தாள் தம் மனங்கொண்டு உணர்தலுமே அவர்அருளால்" அதிமதுர மாங்கனி ஒன்று அம்மையாரின் கையில் விழுந்தது

இறைவனின் கருணையை எண்ணி மகிழ்ந்து , அவன் அளித்த மதுரம் நிறைந்த மாங்கனியைக் கொண்டு வந்து கணவனின் தட்டில் இட்டார்.அதைச் சுவைத்துப் பார்த்த பரமதத்தன் "இந்த மாங்கனி முன்பு உண்டதை விடச் சுவைமிகுந்ததாக உள்ளதே! இது நான் முன்பு கொடுத்த மாம்பழம் அன்று. மூவுலகத்திலும் பெறுவதற்கு அரியதாய் அமுதினும் மேலான சுவையுடன் உள்ள இந்த மாங்கனி எங்கிருந்து பெறப்பட்டது ?" என்று புனிதவதியாரைப் பார்த்துக் கேட்டான்.

மற்றதனைக் கொண்டு வந்து மகிழ்ந்திடலு மயின்றதனில்
உற்றசுவை யமுதினுமேற் படவுளதாயிட விதுதான்
முற்றருமாங் கனியன்று மூவுலகிற் பெறற்க் கரிதாற்
பெற்றது வேறெங் கென்று பெய்வளையார் தமைக்கேட்டான்
(1742)

பரமதத்தனின் கேள்வி புனிதவதியை ஒரு தர்மசங்கடத்தில் தள்ளியது. கிடுக்கிப் பிடியில் அகப்பட்டுக் கொண்ட அவர், உண்மையை உரைக்கவும் முடியாமல் மறைக்கவும் முடியாமல் ஒரு இக்கட்டான

நிலையில் மாட்டிக் கொண்டார். சிவனருள் செய்ததை வெளியில் சொல்வது குற்றம் என்பதால் கனி இறையருளால் கிடைத்தது என்பதைச் சொல்லக் கூடாது. கணவன் கேட்ட கேள்விக்குக் கற்புடைய மனைவி பதில் சொல்லாமல் இருப்பது அதைவிடக் குற்றம்.பெற்றது வேறு எங்கு என்று கணவன் கேட்ட ஒரு சாதாரணக் கேள்விக்கே என்ன பதில் சொல்வது என்று தெரியாது இருதலைக் கொள்ளி எறும்பு போலத் திரிசங்கு நிலையில் நின்ற புனிதவதி, பரமதத்தன் கேட்ட அடுத்த கேள்வியைக் கேட்டு அதிர்ந்து உள்ளம் நொறுங்கிப் போனார். "எய்தவரும் கனி அளித்தவர் யார்" "இந்தக் கனியை உனக்கு எவன் கொடுத்தான்" என்பது தான் அந்தக் கேள்வி. உண்மையைக்கூறாது இனியும் காலந்தாழ்த்தக் கூடாது என்ற நிலைக்கு உந்தப்பட்ட புனிதவதி இறைவன் அருளால் கனி கிடைத்ததைக் கூறிவிடுகிறார்.

ஈசன் அருளால் இக்கனி கிடைத்தது என்று புனிதவதி கூறிய பின்னும் கடவுள் பக்தி அதிகம் இல்லாத பரமதத்தன் தெளிவடைய வில்லை. அவன் ஒரு சராசரி மனிதன். அவனைப் பொருத்தமட்டில் வாணிபமும் பொருள் ஈட்டுதலும் தான் அவனுடைய முதன்மையான குறிக்கோள். இறைவழிபாடு, காதல், அன்பு, இல்லறம் என்பதெல்லாம் இரண்டாவது தான். அவன்செய்து வரும் வணிகத்தில் ஈசன் அருளுக்கு அதிக இடம் இல்லை.அவனுக்கு எல்லாமே காசுதான். வணிக மூளை அவனுள் வேலை செய்யத் தொடங்கியது. வாசமலர்த் திருவினைப் போன்ற புனிதவதியைப் பார்த்துத் தேசுடைய சடைப் பெருமானான ஈசன் அருளால் இந்த மாங்கனி கிடைத்தது என்றால் இன்னும் ஒரு அழகிய மாங்கனியை அவன் அருளால் வரவழைப்பாய் என்றுகூறுகிறான்.

ஈசன் அருள் எனக் கேட்ட இல்இறைவன் அதுதெளியான்
வாசமலர்த் திருவனையார் தமைநோக்கி மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் திருவருளேல் இன்னமும் ஓர்
ஆசு இல் கனி அவனருளால் அழைத்து அளிப்பாய்

(பெ.பு.1745)

இதைக் கேட்டு முன்னை விடப் பெரிய சங்கடத்தில் மாட்டிக் கொண்ட புனிதவதியார் கவலை தோய்ந்த முகத்துடன் உள்ளே சென்றார்.பாம்பினை அணிகளனாகக் கொண்ட பரமனை வணங்கினார். எனக்கு இன்னும் ஒரு மாங்கனியை இறைவா நீ வழங்கி அருளாவிடில் என்னுடைய உரை பொய்யாகி விடுமே என்று வேண்டினார். "ஈங்கு இது அளித்து அருளேல் என்னுரை பொய்யாம்" (1746). அடியவர்களுக்குக் குறித்த நேரத்தில் அருள் செய்யும் இறைவன் அம்மையாரின் கையில் மற்றுமொரு மாங்கனியை அளித்தார். புனிதவதியார் வெளியே வந்து பரமதத்தன் கையில் அந்த மாங்கனியைக் கொடுத்தார். அப்பொழுது அங்கு ஒரு அதிசயமே நிகழ்ந்தது.

## 13. பரமதத்தன் மனைவியைத் தெய்வமென எண்ணுதல்

மனைவி கொடுத்த கனியைப் பரமதத்தன் அதிசியத்துடன் வாங்கினான். அவன் வாங்கும் போது ஏற்பட்ட வியப்பு அடங்கும் முன்னரே அந்த மாங்கனி அவன் கையில் இருந்து மறைந்தது. "வணிகனும் தன்கைப்புக்க மாங்கனி பின்னைக் காணான்" (1747).அதைக் கண்ணுற்ற பரமதத்தன் அச்சத்தால் மனம் தடுமாறினான். அணிகுழல் அம்மையாரைத் தெய்வமாக எண்ணினான். புனிதவதி தன் மனைவி என்ற எண்ணத்தை மாற்றிக் கொண்டான். மனைவியை விட்டுப் பிரிந்து செல்ல முடிவு செய்தான். தன்னுடைய எண்ணத்தை எவர்க்கும் சொல்ல அவனுக்குத் துணிவில்லை. அதனால் இல்லற வாழ்க்கையில் பற்றில்லாது, மனைவியுடன் எவ்வித உறவும் இன்றி வாழத் தொடங்கினான்.

## 14. மாங்கனியின் மகிமை

காரைக்கால் அம்மையாரின் வாழ்வு முழவதும் மாங்கனியை மையமாகக் கொண்டமைந்தது.மாங்கனியை வைத்துத் தான் இறைவன் அவர் வாழக்கையின் போக்கையே மாற்றுகிறார். சிவன் அருள் பெற்ற மாங்கனியைக் கையில் வாங்கியவுடன் அது மாயமாக மறைந்ததைக் கண்டு மனக்கலக்கம் கொண்டு பரமதத்தன் புனிதவதியோடு வாழ்ந்த இல்லற வாழக்கையை முடித்து வெளியேறுகிறான். இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு ஒழுகிய அம்மையாரை இறை நெறிக்கு முழுவதுமாக மாற்ற எண்ணிய இறைவன் நடத்திய திருவிளையாடலே மாங்கனி நாடகம் ஆகும். (காரைக்கால் அம்மையார் மாங்கனி பெற்ற நினைவு நாள் ஆனிமாதம் பவுர்ணமி தினத்தன்று "மாம்பழத் திருநாள்" என்ற பெயரில் காரைக்காலில் கொண்டாடப்படுகின்றது.)

## 15. பரமதத்தன் புனிதவதியைப் பிரிந்து செல்லுதல்

இல்லறத்தில் ஒட்டுறவின்றி வாழ்ந்து வந்த பரமதத்தன் இறுதியாக மனைவியைப் பிரிய முடிவு செய்தான். தான் புனிதவதியைப் பிரிந்து செல்கிறேன் என்று வெளிப்படையாகச் சொல்ல முடியாது. எனவே வெளி நாட்டிற்கு வணிகம் செய்யவதற்காகச் செல்வதாகக் கூறி அதற்கு வேண்டிய மரக்கலத்தைச் செய்தான். சுற்றத்தினர் வழியனுப்ப மரக்கலத்தில் வெளிநாட்டிற்குச் சென்றான். அங்கு வாணிபம் செய்து நிறைந்த பொருள் ஈட்டினான். சிறிது காலம் கழிந்த பின் பெரும் பொருளுடன் அங்கிருந்து புறப்பட்டுப் பாண்டிநாட்டில் உள்ள ஒரு பட்டினத்திற்கு வந்து சேர்ந்தான்.

பாண்டிநாட்டுத் துறைமுகப் பட்டினத்தில் பரமதத்தன் வாணிபத்தில் நிறைந்த செல்வம் சேர்த்தான். புனிதவதியை மணந்து

அவருடன் வாழ்ந்த செய்தியை மறைத்து அங்கு வணிகர் குலத்தைச் சேர்ந்த மங்கை ஒருத்தியை மணந்தான். மகிழ்ச்சி மிக்க அவர்கள் மண வாழ்க்கையில் பெண் மகவு ஒன்று பிறந்தது.

புனிதவதியைப் பிரிந்து மற்றொறு மங்கையை மணந்து குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து மகிழ்வோடு வாழ்ந்து வந்தாலும் பரமதத்தனால் தன் முதல் மனைவியை மறக்க முடியவில்லை. இவ்வுலக மங்கையாக ஏற்க மறுத்த அவன் உள்ளம் புனிதவதியைத் தெய்வமங்கையாக ஏற்றுப் போற்றியது. இதன் காரணமாகத் தன் பெண் குழந்தைக்குப் புனிதவதி என்று பெயர் வைத்தான்.

## 16. உறவினர் புனிதவதியைப் பரமதத்தனிடம் அழைத்து செல்லுதல்

பரமதத்தன் பாண்டி நாட்டில் மறுமணம் புரிந்து கொண்டு மகிழ்வோடு வாழ்ந்து வரும் செய்தி புனிதவதியாருக்குத் தெரியாது.அவர் காரைக்காலில் கற்பு நெறியில் நின்றுமனையறம் புரிந்து வாழ்ந்து கொண்டிருந்தார்.ஆனால் புனிதவதியின் உறவினர்களின் செவியில் இந்தச் செய்தி விழுந்ததும் அவர்கள் மயங்கினர்.ஒருவாறு மனம் தெளிந்த அவர்கள் எவ்வாராயினும் புனிதவதியைக் கணவன் பரமதத்தனிடம் சேர்த்துவிடுவதே நல்லது என்ற முடிவுக்கு வந்தனர். மாணிக்க மணிகளால் அலங்கரிக்கபட்ட பல்லக்கில் புனிதவதியாரை அமரவைத்துப் பாண்டி நாட்டில் பரமதத்தன் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றனர். சிலநாட்கள் கழித்து அவர்கள் பரமதத்தன் இருக்கும் பட்டினத்திற்கு வந்து சேர்ந்தனர். தாங்கள் வந்திருக்கும் செய்தியைப் பரமதத்தனுக்குச் சொல்லி அனுப்பினர்.

## 17.பரமதத்தன் புனிதவதியாரின் அடிபணிதல்

செய்தியைக் கேட்டவுடன் முதலில் சிறிது அச்சம் அடைந்த பரமதத்தன் தன் மனைவியையும் தளர்நடை பயிலும் பெண்மகவையும் அழைத்துக்கொண்டு புனிதவதியார் இருந்த இடத்திற்கு வந்தான்.அங்கு நின்று கொண்டிருந்த புனிதவதியார் திருப்பாதங்களில் விழுந்து வணங்கினான். "யாம் உமது அருளால் வாழ்வேன்" இந்தக் குழந்தைக்கும் உமது திருநாமத்தையே வைத்துள்ளேன் என்று கூறினான்.

பரமதத்தன் புனிதவதியாரின் பாதங்களில் விழுந்து வணங்கியதை எதிர்பார்க்காத சுற்றத்தார் சிறிதே அதிர்ச்சி அடைந்தவராய்ப் பரமதத்தனைப் பார்த்து மனைவியின் காலில் கணவன் விழுந்து வணங்குவது ஏன் என்று கேட்டனர். அவ்வாறு வினவிய உறவினரைப் பார்த்துப் பரமதத்தன் "இவர் மானுடப் பிறவி அல்லர். நற்பெறும் தெய்வமாவார். இதனை நான் முன்னரேஅறிந்ததால் தான் என் பெண் குழந்தைக்கு இவர் பெயரை வைத்துள்ளேன். அதனால் இவருடைய பொற்பாதங்களை வணங்கினேன். நீங்களும் அது போல இவ்ரைப்

போற்றுங்கள்" என்று கூறினான்."பொற்பதம் பணிந்தே நீரும் போற்றுதல் செய்மின் என்றான்." (1763)

## 18. புனிதவதியார் பேய் வடிவம் பெறுதல்

பரமதத்தன் தன் காலடியில் விழுந்து வணங்கியதைக் கண்டு துணுக்குற்ற புனிதவதியார் சற்றே விலகிச் சுற்றத்தாருடன் சேர்ந்து நின்றார். தன் இல்லற வாழ்வு முடிவுக்கு வந்ததை உணர்ந்தார். பந்த பாசத்தை ஒதுக்கித் தள்ளினார். இறைவனைச் சிந்தையில் நிறுத்தி ஒரு முடிவுக்கு வந்தார். பரமதத்தன் அவருக்குக் கணவனாகத் தெரியவில்லை, வணிகனாகத்தான் தெரிந்தான். இந்த வணிகனின் எண்ணம் அவருக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது. கணவன் தன்னை ஏற்றுக் கொள்ள மறுத்த பிறகு அவனுக்கு மட்டுமே சொந்தமான தன் உடல் அழகைத் துறக்க முடிவு செய்கிறார். "நான் தாங்கி இருக்கும் வனப்பு மிகுந்த தசைப்பொதியை நீக்கி அங்கு உன் திருவடிகளைப் போற்றி வழிபடுகின்ற பூதகணங்களுடைய உருவமாகிய பேய் உருவை அடியேனுக்கு அருள வேண்டும்" என்று இறைவனை வேண்டினார்.

"ஈங்கிவன் குறித்த கொள்கை இது இனி இவனுக்காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்து இங்கு உன் பால்
ஆங்கு நின் தாள்கள் போற்றும் பேய் வடிவு அடியேனுக்குப்
பாங்குற வேண்டும்"

என்று பரமன்தாள் பரவி நின்றார் (பெ.பு.1765).

சிவபெருமானின் அருளால் புனிதவதியாரின் உடம்பு அழகு சேர்க்கும் சதை எல்லாம் நீங்கி உயிரற்ற எலும்பு மட்டும் உள்ள உடம்பாகிப் பேய் உருவம் பெற்றார்.

பேய் என்ற சொல் அண்மைக் காலத்தில்தான் பிசாசு என்னும் பொருள் பட அச்சத்தை ஏற்படுத்தும் வகையில் வழங்கி வருகிறது. ஆனால் முற்காலத்தில் பேய் என்னும் பெயர் சிறந்ததாகக் கருதப்பட்டது. ஆழ்வார்களில் பேய் ஆழ்வார், பூதத் தாழ்வார் என்ற பெயர்கள் உண்டு. "பேய் மகள் எயினி"என்று புறநானூற்றிலே வருகிறது.

புனித வதியார் தாம் வேண்டிப் பெற்ற பேய் உருவம் குறை வயதில் இறந்து ஆசைகள் நிறைவேறாமல் இடுகாட்டில் அலைந்து திரியும்அழுக்குடைய இழிந்த பேய் வடிவம் அன்று. இது இறைவனைச் சுற்றி நிற்கும் தூய்மைவடிவுடைய பூதகணங்களுள் ஒன்று என்றும், காண்பவரெல்லாம் அச்சத்துடன் விலகாமல் பக்தியுடன் வணங்கும் உருவம் என்றும், அம்மையாரின் பேய் வடிவத்தைச் சேக்கிழார் பெருமான் பெருமைப்படுத்திச் சொல்கிறார். "வானமும் மண்ணும் எல்லாம் வணங்கும் பேய் வடிவம்" (பெ.பு 1766) என்கிறார்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகையில் "பேயார்க்கும் அடியேன்" என்று போற்றி வணங்குகிறார். அம்மையார் தாம் பாடிய அற்புதத் திருவந்தாதியில் "மற்றொரு கண் நெற்றி மேல்

வைத்தான் தன் பேயாய நற் கணத்தில் ஒன்றாய நாம்"என்று கூறிக்கொள்கிறார். அதே பதிகத்தில் மற்றும் ஒரு இடத்தில் தம்மைக் "காரைக்கால் பேய்" என்றே அழைத்துக் கொள்கிறார். (அற்புதத் திருவந்தாதி பாடல் 101)

பேயுருவம் பெற்ற புனிதவதியார் இறைவன் அருளால் ஞானம் பெற்று உமையொருபாகன் மீது "அற்புதத் திருவந்தாதி" என்னும் தலைப்பில் 101 பாடல்களில் ஒரு பதிகம் பாடினார். இறைவனின் தாமரை போன்ற பாதங்களை வணங்கிப் போற்றும் பூதகணங்களுள் நானும் ஒரு கணமாகினேன் என்று மகிழ்ந்து பாடினார்.

எலும்புக்கூடாகிப் பேய் வடிவத்தில் வரும் புனிதவதியாரைப் பார்ப்பவரெல்லாம் பயந்து ஓடுகிறார்கள்.அவர்கள் ஓடுவதற் குரிய காரணத்தைக் கேட்டு அறிந்த அம்மையார்,"அண்டர்நாயகனான சிவபெருமான் மட்டும் என்னை அறிந்தால் போதும். ஏனைய எட்டுத்திக்குகளிலும் உள்ளோர் என்னை அறியவில்லை என்றால் அது எனக்கு ஒரு குறையாகப் படவில்லை.நான் எந்த வடிவத்தைக் கொண்டாலும் எனக்குக் கவலை இல்லை" என்று கூறுகிறார்.

கண்டவர் வியப்புற்று அஞ்சி கையன்று ஓடுவார்கள்
கொண்டதோர் வேடத்தன்மை உள்ளவர் கூறக்கேட்டே
அண்டர் நாயகனார் என்னை அறிவரேல் அறியா வாய்மை
எண்டிசை மாக்களுக்கு யான் எவ்வுருவாய் என்

- (பெ.பு எண் 1770)

## 19. கயிலை மலைக்குச் செல்லுதல்

கயிலை மலை இமயமலைச் சிகரங்களுள் ஒன்று. அப்பரும், சம்பந்தரும் இம்மலையைக் கயிலை, கயிலாயம் என்றும் சுந்தரர் நொடித்தான் மலை என்றும் சேக்கிழார் திருமலை, வெள்ளியங்கிரி என்றும் குறிப்பிடுகின்றனர்.

கயிலை மலையை அடைவதற்காகப் புனிதவதியார் மனத்தினும் விரைவாக வடதிசைத் தேசம் எல்லாம் கடந்தார். காடு மலை எல்லாம் கடந்து சூலத்தை ஏந்திய சிவபெருமான் உறையும் ஒளிபொருந்திய திருக்கயிலையின் அடிவாரத்தை அடைந்தார். எம்பெருமான் வாழும் புனிதம் மிகுந்த கயிலைமலையைக் காலால் மிதித்து அதன் தூய்மையைத் தூர்க்கக் கூடாது என்று எண்ணிய புனிதவதியார் காலால் நடப்பதைத் தவிர்த்துத் தன் தலையாலே நடந்து மலை மேலே ஏறிச் சென்றார்.

வெள்ளி மலையின் மேல் தலையினால் ஏறிவரும் அம்மையாரின் எலும்பு உருவத்தை இமையவல்லியான உமையவளின் திருக்கண்கள் நோக்குகின்றன.அதிசயத்தால் உள்ளம் வியக்க இறைவனைப் பார்த்து "எம்பெருமானே! தலையால் நடந்து மலைமேல் ஏறிவரும் எலும்புவடிவம் கொண்ட உடம்புடைய இவரின் அன்பின் திறம் என்னே ! இவர் யார்?" என்று வினவினார்.

## 20. புனிதவதியாரைச் சிவன் "அம்மையே" என்று அழைத்தல்

அதற்குச் சிவபெருமான் உமையைப் பார்த்துக் கூறுகிறார், "உமையே! இங்கே வரும் இவள் நம்மைப் பேணிப் போற்றுகின்ற அம்மையாவாள். இப்பெருமை சேர் பேய் வடிவத்தை அவளே வேண்டிப் பெற்றனள்." இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும்போதே அருகில் வந்தடைந்த புனிதவதியாரை "அம்மையே" என்று செம்மை திகழும் சொல்லால் அழைத்து உலகம் எல்லாம் உய்யும் வண்ணம் அருள் செய்தார். "தாயிலி, தந்தையிலி" என்று தாய் தந்தை இல்லாதவன் எனப்படும் சிவபெருமான் தாய்நிலை பெறாத புனிதவதியாரைப் பார்த்து "அம்மையே" என்று அழைத்ததில் ஆயிரம் ஆயிரம் உட்பொருள் அடங்கியுள்ளன.

"வரும் இவள் நம்மைப் பேணும்
அம்மைகாண் ! உமையே ! மற்றும்இப்
பெருமை சேர் வடிவம் வேண்டிப்
பெற்றனள்" என்று பின்றை
அருகு வந்து அணைய நோக்கி
"அம்மையே" என்னும் செம்மை
ஒருமொழி உலகம் எல்லாம்
உய்யவே அருளிச் செய்தார் (பெ.பு.எண்;1774)

## 21. புனிதவதியார் "அப்பா" என்று சிவனை அழைத்தல்

"அம்மையே" என்று ஈசன் அழைத்ததைக் கேட்டுப் பேருவகை அடைந்த புனிதவதியார் எம்பெருமானை "அப்பா" என்று அழைத்துப் போற்றி இறைவனின் தாமரை போன்ற செம்பொன் பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுந்தார் .

"அங்கணன் "அம்மையே" என்று அருள்செய "அப்பா" என்று பங்கயச் செம்பொன் பாதம் பணிந்து வீழ்ந்து எழுந்தார்". (பெ.பு.1775)

## 22. இறைவன் வரம் அருளுதல்

வெண்சங்கால் ஆன குழை அணிந்த சிவபெருமான் "அப்பா" என்று அழைத்துத் தம்மை வணங்கி எழுந்த அம்மையாரைப் பார்த்து "உனக்கு என்னவரம் வேண்டும்" என்று கேட்கிறார். அதற்கு அம்மையாரும் பணிவோடு தமக்கு வேண்டுவதைக் கூறுகிறார்.

1. எக் காலத்தும் இறவாமல் நிலையாக இருக்கும் இன்பம் தரும் அன்பை உன்னிடத்தில் நான் வைக்க வேண்டும்
2. நான் இனிப் பிறவாமை வேண்டும்.
3. அவ்வாறு நான் மீண்டும் பிறக்கும் நிலைமை வந்தால் உன்னை எக்காலத்தும் மறவாமை வேண்டும்.

4. மற்றும் அறவா நீ ஆடும்போது நான் மகிழ்ந்து பாடி உன் திருவடியின் கீழ் இருக்க வேண்டும்.

இறவாத இன்ப அன்பு
வேண்டிப் பின் வேண்டுகின்றார்
"பிறவாமை வேண்டும்; மீண்டும்
பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும்; இன்னும்
வேண்டும் நான் மகிழ்ந்து பாடி
அறவா! நீ ஆடும் போதுன்
அடியின் கீழ் இருக்க"

என்றார். (பெ.பு.பாடல்:1776).

புனிதவதியார் வேண்டியவற்றை எல்லாம் அருளிய சிவபெருமான் அம்மையை நோக்கித் "தென்திசையில் தொன்மை பொருந்திய திருவாலங் காட்டிற்குச் சென்று அங்கு யாம் ஆடுகின்ற நடனத்தைக் கண்டுகளித்து எப்போதும் எம்மைப்பாடுவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

நாயன்மார்களில் கயிலைக்குச் சென்று சிவபெருமானைத் தரிசித்த ஒரே நாயனார் என்ற பெருமை காரைக்கால் அம்மையாருக்கு உண்டு.

அவருக்கு முன்னால் சைவ சமயக் குரவர் நால்வரில் ஒருவரான திருநாவுக்கரசர் கயிலையைக் கண்டு களிக்க அடியவர்களுடன் காசி வரை சென்றார். அங்கு அடியார்களை நிறுத்திவிட்டுத் தான்மட்டும் கயிலைக்குச் சென்றார். உடல் தளர்ந்த நிலையிலும் உள்ளம் சோர்வுறாமல் சென்றார். கால் தேய்ந்து, கை தேய்ந்து மார்பும் தேய்ந்த பின்னும் அவர் மனம்தளராமல் புரண்டு சென்றார், அப்படியும் செல்லமுடியாமல் செயலற்றுக் கிடந்தார். அவர் நிலைமையைக் கண்டு மனமிரங்கிய கயிலை நாதன் முதியவர் கோலத்தில் கீழே இறங்கி வந்து திருநாவுக்கரசரைப்பார்த்துக் "கயிலை மானுடர் காணும் தன்மையுடையதன்று . எனவே திரும்பிச் செல்க" என்று கூறினார்.

"ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டு அல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு செல்லேன்" என்று திருநாவுக்கரசர் பிடிவாதம் பிடிக்க அவரை அங்கிருந்த ஒரு பொய்கையில் மூழ்கச் செய்து திருவையாற்றில் உள்ள மற்றொரு பொய்கையில் எழச்செய்து அம்மை அப்பராகக் காட்சி கொடுத்து அருள் பாலித்தார்.

## 23.அம்மையார் திருவாலங்காடு அடைதல்

தான் வேண்டிய வரங்களை எல்லாம் பெற்றுக் கொண்ட அம்மையார் வேதத்தின் மெய்ப்பொருளாய் விளங்கும் சிவபெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு மறுபடியும் வணங்கித் தலையினாலேயே நடந்து நடந்து திருவாலங்காடு என்னும் திருப்பதியை அடைந்தார்.

திருவாலங்காட்டில் திருவடிகளை மேலே உயர்த்தித் திருத்தாண்டவம் ஆடும் கோலத்தைக் காணும் பேறு பெற்ற காரைக்கால் அம்மையார் "கொங்கை திரங்கி", "எட்டி இலவம்" என்னும் இரண்டு திருப்பதிகங்களை அருளிச்செய்து இறைவனின் திருத்தாண்டவத்தைக் கண்டு களித்தார். பின்னர் ஆண்டவன் திருவடியில் ஐக்கியம் ஆகும் பேறு பெற்றார்.

திருவாலங்காட்டில் இறைவன் இரத்தின அம்பலத்தில் நடனம் ஆடுகிறார். தில்லையில் பொன்னம்பலத்திலும், மதுரையில் வெள்ளியம் பலத்திலும், நெல்லையில் தாமிர அம்பலத்திலும், குற்றாலத்தில் சித்திர அம்பலத்திலும் இறைவன் நடனம் ஆடுகின்றார். "தில்லையில் ஆண்டவன் ஆடும் நடனம் ஆனந்த தாண்டவம் ஆகும். திருவாலங்காட்டில் ஐயன் ஆடும் நடனம் சண்ட தாண்டவம் அல்லது ஊர்த்தாண்டவம் எனப்படும். இது கடுமையும் வேகமும் நிறைந்த நடனம்" (பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் - பெரிய புராணம் - ஓர் ஆய்வு பக்கம் 445).

## 24. காரைக்கால் அம்மையாரின் இலக்கியப் புலமை

அறுபத்து மூன்று நாயன்மார்களில் பெண்பாலார் மூவர்- இசைஞானியார், மங்கையர்க்கரசியார், புனிதவதியார் என்ற காரைக்கால் அம்மையார். இம்மூவரிலும் இயல் இசை என இருவகைத் தமிழிலும் புலமை பெற்றவர் காரைக்கால் அம்மையார்.

தேவாரம் பாடிய மூவருக்கும் காலத்தால் முற்பட்டவர் காரைக்கால் அம்மையார். அதனால் சிவபெருமான் மேல் முதன்முதலாக பதிகம் பாடியவர் என்றபெருமையை பெறுகிறார்.

காரைக்கால் அம்மையார் நான்கு பதிகங்களைப் பாடியுள்ளார்.

1. அற்புதத் திருவந்தாதி (101 பாடல்கள்)
2. திரு இரட்டை மணிமாலை (20 பாடல்கள்)
3. திருவாலங்காட்டு மூத்த பதிகம் (11 பாடல்கள்)
4. திருவாலங்காட்டு மூத்த பதிகம் (11 பாடல்கள்)

அம்மையாரின் திருப்பதிகங்கள் நான்கும் பதினோராம் திருமுறையில் இரண்டாவதாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

அற்புதத் திருவந்தாதியும் திரு இரட்டை மணிமாலையும் அம்மையார் பேய் உருவத்தை வேண்டிப் பெற்றபின் கயிலைக்குச் செல்லும் வழியில் பாடப் பெற்றவை. அற்புத திருவந்தாதியில் அம்மையார் சிவபெருமான் தன்னை ஆட்கொண்டதையும், தான் அரனுக்கு அடிமையானதையும், இறைவனுடைய சிறப்பியல்புகளையும் வியந்து போற்றிப் பாடுகிறார்.

திருவிரட்டை மணிமாலை ஆடலரசனின் அருமை, பெருமை, அருஞ்செயல்களைப் பற்றி விரிவாகக் கூறுகிறது.

மூத்த திருப்பதிகங்கள் இரண்டும் இறைவனின் ஊழி நடனத்தைப் பற்றியும் பேய்களின் பழக்க வழக்கங்களைப்பற்றியும் விரிவாகக் கூறுகின்றன. இந்த இரண்டு திருப்பதிகங்களும் காலத்தால் தொன்மையும் இறைவனின் ஊழி நடனத்தைப் பாடிய பெருமையும் கொண்டவையாதலால் மூத்த திருப்பதிகங்கள் என்று போற்றப் படுகின்றன. (டாக்டர் திருமதி எம்.எஸ். வசந்தா - கன்னடத்தில் காரைக்கால் அம்மையார்.)

திருஞான சம்பந்தர் "தோடுடைய செவியன்" என்ற தேவாரப் பதிகத்தைப் பாடுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே அம்மையார் "கொங்கை திரங்கி" என்ற திருப்பதிகத்தைத் தேவாரத்திற்குத் தோற்றுவாய் போலப் பாடி அருளியதால் இதற்கு மூத்த திருப்பதிகம் என்று பெயர் வந்ததாகத் திருமுருக கிருபானந்தவாரியார் கூறுகிறார்.

## 25. அம்மையாரின் காலம்

தேவாரம் பாடிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆன மூவருக்கும் காலத்தால் முன்னவர் காரைக்கால் அம்மையார். இவர் காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டாக இருக்க வேண்டும். (பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன்.)

எனவே இவர் சைவ சமயக்குரவர் நால்வருக்கும் காலத்தால் முற்பட்டவர் என்பது அடியில் கூறப்படுவதாலும் புலனாகும். திருஞானசம்பந்தர் போற்றிப் பாராட்டும் பெருமைக்கு உரியவர் அம்மையார். சம்பந்தர் திருவாலங்காட்டுக்கு வந்த போது, அங்கு காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து வந்து இறைவனை வழிபட்டார் என்பதால், அங்கு தாம் காலடி வைத்து நடக்கக் கூடாது என்று எண்ணி ஊருக்கு வெளியே தங்கினார் என்று சேக்கிழார் கூறுகிறார்.

## 26. அயல் நாடுகளில் காரைக்கால் அம்மையார்

சேக்கிழார் காலத்திற்கு முன்னரே, "தமிழக எல்லையைக்கடந்து பரவிய வரலாறுகளுள் மிகமிகச் சிறப்பு வாய்ந்ததும், மிகவும் அதிகமான இடங்களில் பரவியதுமான வரலாறு காரைக்கால் அம்மையாரின் வரலாறாகும்".

"கம்போடியாவில் பெண்டாசிராய் என்ற இடத்தில் உள்ள கோவிலில் நடராஜரின் வலப்புறத்தில் பேய் வடிவத்தில் காரைக்கால் அம்மையார் அமர்ந்திருக்கிறார்". (பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் - பெரியபுராணம் ஓர் ஆய்வு பக்கம் 433)

காரைக்கால் நகரிலிருந்து வெளி நாட்டிற்கு வாணிபத்திற்காகச் சென்ற வணிகர்கள் காரைக்கால் அம்மையாரைத் தங்கள் தெய்வமாக வழிப்பட்டனர் என்று திரு.க.த.திருநாவுக்கரசு அவர்கள் கூறுகிறார். (தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு). கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கடல் வாணிபத்திற்குச் சென்ற தமிழர்கள்

காரைக்கால் பேயைத் தங்கள் குல தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்துள்ளனர். அம்மையாரின் சிலையையும் தம்முடன் எடுத்துச் சென்றுள்ளனர் என்றும் தெரிகின்றது. இவர்களால் தென்கிழக்கு ஆசிய நாடுகளான தாய்லாந்து, கம்பூச்சியா, இந்தோனேசியா, பாலி முதலிய நாடுகளில் அம்மையாரின் வழிபாடு பரவியுள்ளது.

## 27. காரைக்கால் அம்மையாரின் மற்றுமொரு சிறப்பு

காரைக்கால் அம்மையாருக்கு மற்றுமொரு சிறப்பை அளிப்பது அவர் அடியார்கள் சிலைவரிசையில் உட்கார்ந்திருக்கும் நிலை. அறுபத்து மூன்று நாயன்மாாகளில் ஏனைய அறுபத்தி இரண்டு நாயன்மார்களும் நின்ற நிலையில் இருக்க, காரைக்கால் அம்மையார் ஒருவர் மட்டும் தான் அமர்ந்த நிலையில் இருக்கிறார். பிறப்பும் இறப்பும் இல்லாத - ஒரு தாயின் வயிற்றில் பிறக்காத- கயிலயங்கிரியின் தலைவனான இறைவன் புனிதவதியாரை "அம்மையே" என்று அழைத்துத் தனக்குத் தாயாக்கிக் கொண்டான். குழந்தையே பெறாத புனிதவதியார் இறைவனுக்கே தாயானார். இவ்வாறு இறைவனுக்கே தாயான பெருமையைப் பெற்றதனால் தான் காரைக்கால் அம்மையார் அமர்ந்த நிலையில் அடியவர்களுக்கு அருள் சேர்க்கும் பெருமையைப் பெற்றுள்ளார்.

அம்மையாரின் பொன்னார் மலரடிகள்
நம் அனைவரின் தலைமேல் அமையுமாக.

ooo

# அமர்நீதி நாயனார்

காவிரி நதியால் வளம் பெற்ற சோழ நாட்டில் உள்ள பெரிய நகரம் பழையாறை. மலர்ச் சோலைகளும், தேனை உண்ட களிப்பில் மயங்கி ஆடும் வண்டுகளும், வானில் மிதந்து வரும் மேகக்கூட்டங்களும் தேர்கள் பவனிவரும் தெருக்களும் உடைய பெருமைமிக்க பழைய ஊர் அது. அங்கு புகழ்மிக்க வணிகர் குலத்தில் பிறந்தவர் அமர்நீதி நாயனார். வெளிநாடுகளில் இருந்து பொன்னும், மணியும், நல்முத்தும், உயர்தரமான பட்டு ஆடைகளும் வாங்கிவந்து உள்நாட்டில் விற்கும் வளம்பொருந்திய வாணிபத்தில் அவர் சிறந்து விளங்கினார்.

சிவபெருமானின் திருவடியன்றி வேறெதையும் சிந்தையில் கொள்ளாதவர் அமர்நீதியார். தம்மை நாடிவரும் அடியவர்களுக்கு அன்னமிட்டு அவர்களின் கருத்து அறிந்து அவரவர்க்கு வேண்டிய ஆடைகள், கந்தை, கோவணம், கீள் முதலியவற்றை அளித்து அதனால் அடையும் மகழ்ச்சியை அனுபவித்து வாழ்ந்து வந்தார். (கந்தை என்பது

நான்கு அல்லது ஐந்து துணிகளை ஒன்றின்மேல் ஒன்று வைத்துத் தைக்கப் பெற்ற போர்வை, கீள் என்பது கோவணத்தை அணிவதற்காக இடுப்பைச் சுற்றிக் கட்டிக் கொள்ளும் அரைஞாண் போன்ற கயிறாகும்.)

பழையாறைக்குப் பக்கத்தில் உள்ள சிவத்தலம் திருநல்லூர் ஆகும். திருநாவுக்கரசரான அப்பர் பெருமானுக்கு இறைவன் திருவடி சூட்டிய பெருமை பெற்ற தலமாகும். அங்கு ஆண்டுதோறும் சிவபெருமானுக்குத் திருவிழா நடைபெறும். திருவிழாவில் அமர்நீதியார் தம் குடும்பத்தாருடனும் சுற்றத்தாருடனும் கலந்து கொள்வார். இறைவனைக் கண்டு களித்து வணங்கி அவன் அருளைப் பெறும் ஆவலுடன் திருநல்லூரில் வந்து கூடும் பக்தர்களுக்காக அங்கு ஒரு மடத்தையும் அமைத்தார். அங்குவரும் அடியவர்களுக்கும் பக்தர்களுக்கும் அன்னதானம் செய்து மகிழ்ந்து வரும் நாட்களில் ஒருநாள்.

அந்தணர் குலத்துப் பிரம்மச்சாரியைப் போல வேடம் பூண்டு இறைவன் அமர்நீதியார் மடத்துக்கு வருகிறார். பிறையை அணிந்த சடைமுடி, சைவத்திற்கே உரிய திரு வெண்ணீற்றுப் பூச்சு. முப்புரி கொண்ட மான்தோலோடு கூடிய பூணூல், மோதிர விரலில் மரகதக்கல் பதித்த நீண்ட பவித்திரம், முஞ்சி என்ற தர்ப்பைப் புல்லால் திரித்த அரைஞாணைக் கட்டிய இடுப்பு, வெண்மையான கோவணம். மேலே சொல்லப்பட்ட கோலத்தில் அடியவர்களின் மனத்தில் நீங்காது நிலைத்து இருக்கும் தம் திருவடிகளை நிலத்தில் பதித்து இறைவன் வருகிறார்.

அவர் வருகையின் நோக்கம் தான் என்ன? பிரம்மச்சாரிகளுக்கு அடையாளமான கோவணத்தின் பெருமையையும், அமர்நீதி நாயனார் இறைவன் மேல் வைத்துள்ள அன்பு நெறியின் ஆழத்தையும் உலகத்தோர்க்கு எடுத்துக்காட்டி அமர்நீதியாரை ஆட்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடு இறைவன் வருகிறார். "தொண்டர் அன்பெனும் தூநெறியை" வெளிப்படுத்த வருகிறார் என்று சேக்கிழார் கூறுகிறார்.

தன் கையில் தாங்கியிருக்கும் தண்டின்மேல் இரண்டு கோவணங்களையும், பெரிய திருநீற்றுப் பையையும், தர்ப்பைப் புல்லையும் கட்டிக் கொண்டு உமையொருபாகர் அமர்நீதியாரின் மடத்துக்கு வந்து சேர்ந்தார். அடியவரைக் கண்ட அமர்நீதியார் அகமும் முகமும் மகிழ்ந்து அவரடியில் வீழ்ந்து வணங்கி மடத்தின் உள்ளே அழைத்து வந்து அமரச் செய்தார். "இந்த மடத்தினுள் தங்களை இதற்கு முன் பார்த்ததில்லையே. தாங்கள் இன்று இங்குவந்தது அடியேன் முன் பிறவியில் செய்த தவத்தின் நற்பயன்" என்று கூறி வணங்கினார்.

நெற்றிக் கண்ணை மறைத்து அடியவர் உருவத்தில் வந்த சிவனார் தம்மை இன்சொற்களால் வரவேற்ற அன்பரைப் பார்த்து. "அன்பனே! நீ உன்னிடம் வரும் அடியவர் அனைவருக்கும் உணவளித்து அவர்களுக்கு வேண்டிய கந்தை, கீள், உடை, தூயவெள்ளை நிறத்தில் உள்ள கோவணம் ஆகியவற்றைக் கொடுத்து வருவதைக் கேள்விப்பட்டு உன்னைக் காண வந்தனம்" என்றார்.

அதைக் கேட்டு உள்ளம் பூரித்த அமர்நீதியாரும் சிவன் அடியவரைப் பார்த்து "தங்களைப் போன்ற தவநிலை மறையோர் அமுது செய்து அருள்வதற்கு ஏற்றவாறு வேதியர்களைக் கொண்டு தூய்மையாக உணவு சமைக்கப்படுகிறது. ஆதலால் தாங்கள் இன்று இங்கு அமுதுண்டு அருள வேண்டும்" என்று வேண்டினார்.

நாயனாரின் வேண்டுகோளை ஏற்ற மறையவரும் "நல்லது, நான் காவிரியில் நீராடி வருவேன். இது மழைக்காலம். எப்பொழுது மழைவரும் என்று தெரியாது.அவ்வாறு மழை வந்தால் குளித்து முடித்தபின் நான் அணிந்து கொள்ள வைத்திருக்கும் கோவணம் நனைந்து விடும்.அவ்வாறு நனையாது இருக்க என்னிடம் உள்ள இரண்டு கோவணங்களில் ஒன்றை உம்மிடத்தில் தருகிறேன்.திரும்பி வந்தவுடன் பெற்றுக் கொள்கிறேன்" என்று கூறித் தம்மிடம் இருந்த இரண்டு கோவணங்களில் ஒன்றைக் கொடுத்தார். கொடுக்கும் போதே அடியார் "இந்தக் கோவணத்தின் பெருமையை யாம் உமக்குக் கூற வேண்டியதில்லை.நீரே நன்கு அறிவீர்,எனவே இதைக் கோவணம் தானே என்று இகழாது நான் திரும்பி வரும்வரை பாதுகாப்பாக வைத்திருந்து வந்த பின் எம்மிடம் கொடுக்க வேண்டும்" என்று கூறினார்.

நீவிர் நீராடி வரும்வரை பாதுகாப்பாக வைத்திருந்து இந்த கோவணத்தை உம்மிடம் தருவேன் என்று அமர்நீதியார் கூறிய பின் அடியவரும் காவிரியில் நீராடச் சென்றார். வேதியரின் கோவணத்தைப் பெற்றுக் கொண்ட நாயனார்,தாம் அடியவர்களுக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்த மற்ற கோவணங்களுடன் வைக்காமல் வேறு ஒரு காவல் மிக்க இடத்தில் அடியவரின் கோவணத்தைப் பாதுகாப்பாக வைத்தார்.

கோவணத்தை வைத்துச் சோதனை செய்ய வந்த ஆலகாலன் தன்னுடைய திருவிளையாடலைத் தொடங்கினார். அமர் நீதி நாயனார் பாதுகாப்பாக வைத்திருந்த கோவணத்தைக் காணமல் போகும்படி-மறையும்படி செய்துவிட்டார்.

காவிரியில் நீராடி முடித்த மறையவரும் கொட்டும் மழையில் நனைந்தவாறு மடத்திற்கு வந்தார்.அவருக்காக அறுசுவைத் திருவமுது ஆக்கிவைத்துக் காத்துக் கொண்டிருந்த அமர்நீதியார் அடியாரை வரவேற்றார். "நான் மழையில் நனைந்து விட்டேன். குளித்தபின் கட்டிக் கொள்ள வைத்திருந்த மாற்றுக் கோவணமும் நனைந்து விட்டது. எனவே நான் உம்மிடம் கொடுத்திருக்கும் கோவணக்கைத் தாரும்" என்று அடியார் கேட்டார். கோவணத்தைக் களவாடிய கள்வனாகிய இறைவனைக் "கோவணக் கள்வன்" என்று சேக்கிழார் கூறுகிறார். (கொண்டு வாரும் என்று உரைத்தனர் கோவணக் கள்வர்) (பெ.பு பாடல் 520).

அடியவரின் வஞ்சகத்தை அறியாத அமர்நீதியார் கோவணத்தைப் பத்திரமாக வைத்த இடத்தில் பார்த்தார்.அது அங்கு இல்லை, திகைத்தார்.எங்கு தேடியும் காணவில்லை.தாம் வைத்திருந்த

கோவண மூட்டைகள் எல்லாவற்றையும் பிரித்துப் பார்த்தார்.எந்த மூட்டையிலும் இல்லை.எங்கு தேடியும் காணாமல் மனம் வருந்திய அமர்நீதியார் தம் மனைவியையும் சுற்றத்தாரையும் பார்த்து எனக்கு இப்படி ஒரு பெரும்பழி நிகழ்ந்து விட்டதே என்று புலம்பினார்.இறுதியாகச் சற்றே மனம் தெளிந்தவராகத் தம்மிடம் உள்ள கோவணங்களில் ஒன்றை எடுத்துக் கொண்டு அடியவரிடம் வந்தார்.

"அடியவர்களே! தாங்கள் கொடுத்த கோவணத்தைப் பத்திரமாகத்தான் வைத்திருந்தேன். இப்போது எங்கு தேடியும் அதைக் காணவில்லை.நான் அதை ஒளித்து வைத்திருப்பதாகத் தாங்களும் எண்ணிவிடக் கூடாது. அது எப்படிக் காணாமல் போனது என்றும் புலப்படவில்லை. இதைப் போன்ற ஒரு பெரிய அதிசயத்தை நான் எங்கும் கண்டதில்லை. எனவே என்னிடம் உள்ள வேறு ஒரு நல்ல கோவணத்தைத் தங்களுக்காகக் கொண்டு வந்துள்ளேன்.இந்தக் கோவணம் கிழிந்த துணிகளைச் சேர்த்துத் தைத்த கோவணம் அன்று. கோவணமாகவே நெய்யப்பட்டது.அடியவன் பிழையைப் பொறுத்து என்னை மன்னித்து இந்தக் கோவணத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று வேண்டினார்.

இதனைக் கேட்ட அடியவர் உருவில் வந்துள்ள திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் மிகுந்த சினம் கொண்டார். "நாயனாரே! நீங்கள் சொல்வது மிகவும் நன்றாக இருக்கிறது. நான் என் கோவணத்தைக் கொடுத்து நீண்ட நாட்களும் ஆகவில்லை. இன்று - அதுவும் சற்றுமுன் தான் - கொடுத்தேன். நான் கொடுத்த கோவணத்திற்குப் பதிலாக வேறு எந்தக் கோவணத்தையும் நான் பெற்றுக்கொள்ள மாட்டேன். உண்மையிலேயே என் கோவணத்தைக் கவர்வதற்காகத்தான் அடியவர்களுக்குக் கோவணம் அளிப்பதாக நடித்துக் கொண்டிருந்தீரா! உம்முடைய நடத்தை நன்றாகவே இருக்கிறது" என்று கோபத்துடன் கூறினார். அடியவரின் கோபத்தைக் கண்டு அஞ்சிய நாயனார் அவர் திருவடிகளில் விழுந்து வணங்கிக் காணமல் போன கோவணத்திற்குப் பதிலாக நல்ல பட்டாடைகள், நவமணிகள், அவற்றிலும் மேலான கோடித்துணிகள் (புதுத் துணிகள்) தருகிறேன். ஏற்றருள்க என்று வேண்டி அவர் திருவடிகளைமேலும் பலமுறை பணிந்தார்.

பணியும் அன்பரைப் பார்த்துக் கோபம் சிறிதும் தணியாதவர் போல நடித்த சிவன் அடியாரும் "நீவிர் தருகின்ற பொன்னும், மணியும், முத்தும், ஆடையும் பெற்றுக் கொண்டு நான் என்ன செய்ய முடியும். உம்மிடம் கொடுத்த கோவணத்தைப் போன்று, அதற்குச் சமமான மற்றொரு கோவணத்தை இந்தத் தண்டில் கட்டி வைத்திருக்கிறேன். இந்தக் கோவணத்தின் எடைக்கு ஒப்பாக நீவீர் கொண்டு வந்துள்ள கோவணத்தைத் தராசுத் தட்டில் வையும்" என்றார்.

துலை (தராசு) கொண்டுவரப்பட்டது. அடியவர் தண்டில் இருந்த கோவணத்தை அவிழ்த்து எடுத்து ஒரு தட்டில் வைத்தார். அமர்நீதியார் தாம் கொண்டுவந்த கோவணத்தை மற்றொரு தட்டில் வைத்தார்.

இரண்டு தட்டுகளும் சமமாக நிற்கவில்லை. மறையவர் கோவணத்தைத் தாங்கிய தட்டுத் தாழ்ந்தே நின்று அது எடை கூடியது என்று உணர்த்தியது.

உடனே அமர்நீதியார் அடியவரின் அனுமதியுடன் தம்மிடம் இருந்த கோவண மூட்டைகள் அனைத்தையும் கொண்டு வந்து தட்டில் வைத்தார். அப்பொழுதும் அவர் தட்டுக் கீழே இறங்கவில்லை. இதனைப் பார்த்து அமர்நீதியார் ஆச்சரியம் அடைந்தார். தம்மிடம் உள்ள பட்டாடைகள், மெல்லிய துகில்கள் கொண்ட மூட்டைகளையும் வைத்தார். அப்பொழுதும் அவர் தட்டுக் கீழே இறங்க வில்லை.

அதைக் கண்டு வியப்பும்,திகைப்பும் அடைந்த அமர்நீதியார் மறையவரிடம் வந்து "ஐயரே ! பட்டும் பீதாம்பரமும் இட்டும் தட்டுக்கள் சமமாகவில்லை.என்னிடம் உள்ள பொன்,மணி,முத்து முதலியவற்றை வைக்க அனுமதி தர வேண்டும்" என்று வேண்டினார். அடியவரும் "இனி நான் சொல்வதற்கு ஒன்றும் இல்லை.உமது விருப்பம்போல் உம் செல்வங்களை வைக்கலாம்" என்றார். மாற்றுயர்ந்த பொன்னோடு, வெள்ளி, நவரத்தினம், மற்றும் பல உயர்ந்த உலோகங்களையும் கொண்டு வந்து தட்டில் இட்டனர்.அவ்வளவையும் வாங்கிக் கொண்டு அமர்நீதியார் தட்டுக் கீழே இறங்காமல் இருந்ததைப் பார்த்துக் கூடியிருந்த அனைவரும் வியப்பில் ஆழ்ந்தனர்.

தம்மிடம் இருந்த துணிமணிகள், நகைநட்டுக்கள் அத்தனையும் வைத்த பின்னும் நாயனாரின் தட்டு மேலேயே நின்றது. இறைவன் கோவணத்தை வைத்த தட்டு அசையாமல் கீழேயே நின்றது. அமர்நீதி நாயனாருக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் சேக்கிழார் பெருமான் இதற்கு அருமையான காரணத்தைக் கூறுகிறார். நாயனாரின் தட்டில் வைத்திருப்பது அடியவரின் அன்பு.

ஆனால் இறைவன் தட்டில் வைத்திருப்பதோ அவன் அருள். அடியவரின் அன்புக்கு இறைவனின் அருள் எப்பொழுது தாழத்தானே வேண்டும். அடியவரின் அன்புத்தட்டு உயர்ந்தும் இறைவனின் அருள் தட்டுத் தாழ்ந்தும் இருப்பது இதனால் தான் என்று சேக்கிழார் கூறுகிறார்.

முட்டில் அன்பர்தம் அன்பிடுந்தட்டுக்கு முதல்வர்
மட்டு நின்ற தட்டு அருளொடும் தாழ்வுறும் வழக்கால்
பட்டொடும் துயில் அநேகக் கோடிகள் இடும் பக்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத்தட்டு

(பெ.பு. பாடல் எண் : 536)

இறைவனுடைய கோவணம் சாதாரணமான கோவணம் அன்று. அது தவம் நிறைந்த நான்கு வேதங்களையே நூல்களாகக் கொண்டு நெய்த - சிவனுக்கு மிகவும் விருப்பமான- கோவணம். அதனால் தான் கோவணத்தட்டுக் கீழேயே நிற்கிறது. இதற்கு மாறாக எதிரே உள்ள தட்டில் அமர்நீதியாரின் அத்தனைச் செல்வத்தையும் வைத்து அதற்கு மேலும் உலகம் முழுவதையும் வைத்தாலும் நேராக நிற்காது என்று சேக்கிழார் கூறுகிறார்.

தவம் நிறைந்த நான்மறைப் பொருள் நூல்களால் அமைந்த
சிவன் விரும்பிய கோவணம் இடும் செழுந்தட்டுக்கு
அவனிமேல் அமர்நீதியார் தனம் எலாம் அன்றிப்
புவனம் யாவையும் நேர்நிலா என்பதும் புகழோ (பெ.பு. 540)

அடுத்து என்ன செய்வது என்று எண்ணிய அமர்நீதியார் அடியவரிடம் சென்றார். "மறையவரே! இதுவரை என்னிடம் இருந்த எல்லாச் செல்வங்களையும் தராசுத் தட்டில் வைத்து விட்டேன். இனியும் வைப்பதற்கு என்னிடம் எதுவும் இல்லை. நானும் என் மனைவியும் எம் அருமை மைந்தனும் மட்டுமே உள்ளோம். எங்களையும் தட்டில் ஏறுவதற்கு அனுமதி தாருங்கள்" என்றார்.

துலைத்தட்டில் குடும்பத்தையே ஏற்றும் செயல் மூலம் தொண்டரான அமர்நீதி நாயனாருக்குப் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரையேறும் பேற்றினை அளிக்க முடிவு செய்தார் அரனார். எனவே குடும்பத்துடன் தட்டில் ஏறுவதற்கு அனுமதி அளித்தார்.

அமர்நீதியாரும் தம் மனைவி மைந்தனுடன் தராசைச் சுற்றி வந்து அடியவரின் பாதம் பணிந்தார். "சிவபெருமானே! இதுவரை இறைவனது திருநீற்றிலே பற்று வைத்து அடியவர்களுக்கு நான் செய்து வந்த தொண்டில் எள் அளவேனும் தவறில்லை எனில் இந்தத் தராசின் தட்டுக்கள் ஏற்றத் தாழ்வின்றிச் சமமாக நிற்க வேண்டும்" என்று திருநாவலூர் இறைவனை வேண்டி, ஐந்தெழுத்தான பஞ்சாட்சரத்தை ஓதிக் கொண்டே தட்டினில் அனைவரும் ஏறினர்.

இழைத்த அன்பினில் இறைதிருநீற்று மெய் அடிமை
பிழைத்திலோம் எனில் பெரும்துலை நேர்நிற்க என்று
மழைத்தடம் பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுத்து ஓதினார் ஏறினார் தட்டில்
(பெ. பு. பாடல் 544)

அமர்நீதியாரின் குடும்பமே தட்டில் ஏறி நின்றது. அப்போது அண்டர்பிரானின் அரைக் கோவணமும் அமர்நீதி இறைஅடியாரின் அன்பு குறையாத அடிமைத் தொண்டும் சமம் என்பதை உலகுக்கு உணர்த்த இரண்டு தட்டுக்களும் சமமான நேர் நிலைக்கு வந்தன.

சிவத்தொண்டரான அமர்நீதி நாயனாரின் பெருமையை வியந்து உலகினர் யாவரும் ஆச்சரியம் அடைந்தனர். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். திருநல்லூர் முதல்வனான சிவபெருமானும் இடப்பாகம் கொண்ட உமையம்மையுடன் காளை வாகனத்தில் விண்ணிலே தோன்றி எல்லோருக்கும் காட்சி அளித்தார்.இறைவனின் இணையற்ற அழகிய திருக்கோலத்தைக் கண்டு வணங்கிய அமர்நீதிநாயனாரும் அவர் மனைவியும் மைந்தரும் இறைவன் திருவருளால் அவர்கள் அமர்ந்திருந்த தராசுத்தட்டே தெய்வ விமானமாகி விண்ணில் சென்று சிவலோகத்தை அடைந்தனர்.

அமர்நீதியார் அவதரித்த பழையாறைக்கு அருகில் உள்ள திருநல்லூரில் அவரே அக்காலத்தில் கட்டிய திருமடமும் பின்னர் இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் சிவத் தொண்டர் ஒருவர் கட்டிய திருமடமும் இன்று சிதைந்து காணப்படுகின்றன. (மா.சிவகுருநாதப் பிள்ளை - நாயன்மார்கள் வரலாற்றில் பல்வகைச் செய்திகள்- பக்கம் 104).

அமர்நீதி நாயனார் அவதரித்தது பழையாறை, அவர் திருநல்லூரில் தங்கியிருந்து அடியவர்களுக்கு அன்னதானம் அளித்து அணிவதற்கு ஆடைகளும், கோவணமும் வழங்கிவந்தார்.திருநல்லூரில் அமர்நீதி நாயனார் முத்தி அடைந்த ஆனிமாதம் பூரத்தன்று "கோவணத்திருவிழா" என்ற பெயரில் திருவிழா நடைபெறுகிறது.

"அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதி அடியேன்".

-திருத் தொண்டத் தொகை

மீண்டும் பொழிப் பழையாறை அமர்நீதி வெண்பொடியின்
முண்டம் தரித்த பிராற்கு நல்லூரில் முன் கோவணம் நேர்
கொண்டிங்கு அருளென்று தன்பெருஞ் செல்வமும் தன்னையுந்தன்
துண்டமதி நுதலாளையும் ஈந்த தொழிலினனே

- திருத்தொண்டர் திருவந்தாதி!.

ooo

# இயற்பகை நாயனார்

**பொ**ன்னி நதி என்னும் காவிரி ஆறு பாய்வதால் வளம்மிகுந்த சோழ நாட்டில் உள்ளது காவிரிப் பூம்பட்டினம் : காவிரி கடலில் புகும் பட்டினம் என்ற பூம்புகார் நகரம். இது காவிரி ஆறு வங்கக் கடலில் சங்கமிக்கும் இடத்தில் அமைந்துள்ளது. காவிரி ஆற்றின் நீர் கடலில் பாய்ந்து கடலையே புனிதம் ஆக்குகிறது என்று காவிரியை புகழ்ந்து பாடுகிறார் சேக்கிழார் - "பொன்னி நல் நதி மிக்க நீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதம் ஆக்குவது" (பெ.பு. 404).

பூம்புகாரில் தன வனிகர் குலத்தில் பிறந்த இயற்பகை நாயனார் பெருஞ் செல்வந்தராய் எல்லா வளங்களும் பெற்று வாழ்ந்துவந்தார். இவர் பிறைச்சந்திரனைத் தாங்கிய சடை முடியரான சிவபிரானுக்கு அடிமையாகித் தம்மை அண்டிவரும் சிவனடியார் அனைவருக்கும் அவர்கள் வேண்டியதை எல்லாம் இல்லை என்று சொல்லாது கொடுக்கும் இயல்புள்ளவர். இவரைச் சுந்தரர் "இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்" என்று கூறுகிறார்.

இயற்பகை நாயனாரின் இயற்பெயர் எதுவென்று தெரியவில்லை. இயற்பகையார் பற்றற்ற ஞானி. தான் என்றும் தனது என்றும் தன்னுடைய சுற்றத்தார் என்றும் பிரித்து எண்ணிப் பற்றுக்கொள்ளும் இயல்பானபாச உணர்வுகளுக்குப் பகையாக இருந்தார் என்பதால் இவரை எல்லாரும் இயற்பகையார் என்று அழைத்தனர் என்று ஆன்மீகச் செல்வர் நாகர் கோவில் கிருஷ்ணன் எண்ணுகிறார் (அருள் பெற்ற நாயன்மார்கள்).

மனைவியைப் பிறருக்கு வழங்காமல் இருப்பது உலக இயற்கை, ஆனால் இதற்கு மாறாகத் தன்னுடைய இல்லத்தரசியையே தானம் செய்வது உலக இயற்கைக்குப் பகையானது. தன் காதல் மனைவியை அடியவருக்கு அளித்து இயற்கைக்குப் பகையான ஒரு செயலைச் செய்ததால் அவருக்கு இயற்பகை நாயனார் என்று பெயர் வந்தது என்று எண்ணுகிறார் புலவர் வ.ஞானப்பிரகாசம் (சேக்கிழார் காட்டும் திருத்தொண்டு நெறி).

திருநீறு அணிந்த மேனியராய் ஆறு சூடிய ஐயராம் சிவபெருமானை அனு தினமும் மனதில் நினைத்து வாழ்ந்து வரும் பொழுது ஒரு நாள் அடியவர் ஒருவர் இல்லத்திற்கு வந்தார்.தூய்மையான வெண்ணீறு மேனி எங்கும் விளங்கத் தூர்த்த வேடத்தில் சிவபெருமான் இயற்பகையாரின் வீட்டிற்கு வருகிறார். தூர்த்த வேடம் என்றால் காமுகனுக்கு உரிய குறிப்புகள் விளங்கும் வேடமாகும்.இவ்வாறு காமுகன் வேடத்தில் சிவபெருமான் வருவது அவன் உடலில் ஒருபாதியாய் அமைந்த உமையவருக்குத் தெரியுமோ இல்லையோ என்பதை யாமறியோம் என்று சேக்கிழார் கூறுகிறார்.(பாடல்.407). இயற்பகை நாயனார் அடியவர்கள் மேல் வைத்த அன்பின் ஆழத்தை உலகுக்கு உணர்த்துவதற்காகத்தான் கொன்றை வார் சடையுடைய சிவனார் அடியார் வேடத்தில் வருகிறார்.

வணிகர்கள் வாழும் வீதி வழியே வந்து இயற்பகையாரின் இல்லத்துள் அடியவர் நுழைகிறார்.உள்ளே வந்த அடியவரை வணங்கி அவருக்குரிய அர்ச்சனைகளைச் செய்து "முனிவராகிய தாங்கள் எம் இல்லத்திற்கு வந்தது எம் முன்னோர் செய்த தவமே" என்று மொழிந்து அடியவரை இயற்பகையார் வரவேற்றார்.

"சிவனடியார்கள் தாங்கள் விரும்பிய பொருள்களை எல்லாம் இல்லை என்று சொல்லாது கொடுக்கும் உன் இயல்பினை அறிந்து தான் யாம் விரும்பும் ஒரு பொருளை உன்னிடம் கேட்டுப் பெறுவதற்காக உன் இல்லத்திற்கு வந்துள்ளோம். யாம் கேட்கும் பொருளை நீர்கொடுப்பதாய் இருந்தால் கூறுகிறோம்" என்று ஒரு நீண்ட பீடிகையுடன் கீழான எண்ணத்தை உள்ளே மனத்தில் வைத்துக் கொண்டு வெளிப்புறத்தில் மேலான சிவனடியார் வேடத்தில் வந்துள்ள அடியவர் கூறினார்.

நீங்கள் கேட்கும் பொருள் என்னிடத்தில் இருக்குமானால் அது எதுவாயினும் எம்பிரான் அடியவருக்கே உடைமையான பொருளாகும்.

அந்தப் பொருளை நீங்கள் கேட்டு, நான் கொடுத்து நீங்கள் பெற்றுக் கொள்ள வேண்டும என்ற நியதி இல்லை. இதில் எவ்வித ஐயமும் வேண்டாம். நீங்கள் தயங்காமல் கேட்கலாம் என்றுஇயற்பகையார் கூறினார். "யாதும் ஒன்றும் என்பக்கல் உண்டாகில் அன்னது எம்பிரான் அடியவர் உடைமை ஐயம் இல்லை, நீர் அருள் செய்யும்" (பாடல் 410).

காமுகன் வேடத்தில் வந்த அடியார் சிறிதளவும் கூச்சப்படாமல் உன் காதல் மனைவியைப் பெறுவதற்காகத்தான் யாம் இங்கு வந்தோம் என்று கூறினார். "மன்னு காதல் உன் மனைவியை வேண்டி வந்ததிங்கு என" (பெ.பு.பாடல் 404)

அதைக் கேட்ட இயற்பகையார் வியப்போ அதிர்ச்சியோ அடையாமல் மகிழ்ச்சியே அடைந்தார். அடியார்களுக்குத் தொண்டு செய்வது ஒன்றையே தன் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட பக்தர்களுக்குத் தம் செயல் உலக நியதிக்கு - இயற்கைக்கு - ஒவ்வாது மாறுபட்டது என்பதைக் கூட எண்ணிப் பார்ப்பது இல்லை. "என்னிடம் இருக்கும் பொருளையே தாங்கள் விரும்பி கேட்டது எம்பிரான் எனக்கு அளித்த பேறு" என்று கூறி உள்ளே சென்றார். கற்பினால் மேம்பட்டவராயும் தம் காதலுக்கு உகந்த வராயும் விளங்கி ய தன் மனைவியை நோக்கி நான் உன்னை இங்கு வந்துள்ள அடியார்க்கு அளித்துள்ளேன் என்று கூறினார். "விதி மணக்குல மடந்தை இன்றுனை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்தேன்" (பெ. பு . 411)

இதனைக் கேட்ட மது மலர்க் குழல் மனைவியார் முதலில் கலங்கினாலும் பிறகு மனம் தெளிந்தார். தன் கணவரைப் பார்த்து என் உயிரினும் மேலாகிய நாதராகிய தாங்கள் ஒன்றைச் செய் என்று உரைத்தபின் அதைச் செய்வதல்லாது வேறு உரிமை எனக்கு உள்ளதோ "என்னுயிர்க்கொரு நாதநீர் உரைத்தது ஒன்றைச் செய்யும் அத்தனை அல்லால் உரிமை வேறுளதோ எனக்கு" (பெ.பு.பாடல் 412) என்று கூறிக் கணவன் அடிகளில் விழுந்து எழுந்தார். அந்தக் கணத்தில் இருந்து அவர் தன்னுடய மனைவி என்ற நிலையில் இருந்து மாறி அடியவரின் உரிமையானதால் இயற்பகையாரும் அம்மையாரை வணங்கினார். பிறகு திருவினும் பெரிய அம்மையார் வெளியில் சென்று சிவனடியாரின் சேவடியைப் பணிந்து திகைப்புடன் நின்றார்.

மனைவியைத் தாரைவார்த்த பெருமகிழ்ச்சியுடன் இயற்பகையாரும் அடியவரைப் பார்த்து இனி நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார். "இந்தத் தையலை நான் தனியே கூட்டிச் சென்றால் உன்மேல் அன்பு கொண்ட உன் சுற்றத்தார் அனைவரும் என்னைச் சும்மா விடுவார்களா? எனவே ஊர் எல்லை வரை நீ எமக்குத் துணையாகவர வேண்டும்" என்று முனிவர் கூறினார்.

அடடா! முனிவர் கேட்கும் முன்னரே நாம் இதைச் செய்யாது விட்டோமே. அவர் கேட்கும்படி செய்துவிட்டோமே என்று மனத்தில் எண்ணியவராய் இயற்பகையார் வீட்டின் உள்ளே சென்றார். வேறு புதிய

உடைகளை அணிந்து வாளும் பலகையும் ஏந்தி வீரம்மிக்க ஆண் சிங்கம் போன்று அடியவர் எதிரே வந்து நின்றார். அவர்கள் இருவரையும் முன்னே போகச் சொல்லிப் பின்னால் துணையாகச் சென்றார்.

இயற்பகை நாயனாரின் செயலைக் கேள்வியுற்ற சுற்றத்தார்கள் இவர் பித்தனாகி விட்டார். ஆதலின் இவரால் நமக்கு வரக்கூடிய பழியைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று எண்ணி அனைவரும் ஒன்று கூடினர். வேலுடன் வில்லும் வாளும் ஏந்தி அந்த மூவரின் முன்னேவந்து நின்றனர். அடியவரை நோக்கி "வேதியரே! மாற்றான் மனைவியைக் கூட்டிச் செல்லுதல் நீதியா? உன் செயலால் எங்கள் குடிக்கு நீங்காத பழியை ஏற்படுத்தியுள்ளாய். எங்கள் குலக்கொடியை எங்களிடம் விட்டுச் சென்று விடு". என்று கூறி வழி மறித்து நின்றனர்.

இதனால் அஞ்சிய வேதியர் என்ன செய்வது என்று அறியாது பின்னால் வருகின்ற அம்மையாரைப் பார்த்தார். குறிப்பறிந்த அம்மையாரும் "அடியவரே அஞ்ச வேண்டாம். இவர்கள் அனைவரையும் இயற்பகை வெல்வார்" என்று கூறினார். இதனைக் கேட்ட இயற்பகையாரும் அடியவரை அஞ்ச வேண்டாம் என்று ஆறுதல்படுத்திச் சுற்றத்தாரைப் பார்த்து "உயிர் பிழைக்க வேண்டும் என்றால் ஓடிப் போய்விடுங்கள். இல்லையேல் உம்மை என் வாளுக்கு இரையாக்குவேன்" என்று எச்சரித்தார்.

அதைக் கேட்ட சுற்றத்தார் இயற்பகையாரைப் பார்த்து "உன் செயலால் நம் குலத்திற்கு நீங்காத பழியை ஏற்படுத்தி நம் பகைவர்கள் நகைக்குமாறு செய்து விட்டாய்.நாங்கள் எல்லோரும் உயிர் துறந்தாலும் உன் மனைவியை வேதியனுடன் செல்ல விட மாட்டோம்" என்று உறுதியுடன் கூறினர்.

அவ்வாறு கூறியதோடு நில்லாமல் வேதியரைப் போக விடாமல் தடுத்தனர். கோபம் கொண்ட இயற்பகையாரும் முன்னே சென்று ஆண்புலியைப் போலப் போர் செய்து உறவினரின் தோள்களையும் தாள்களையும் கைகளையும் வெட்டி மண்ணில் வீழ்த்தினார். இறந்தவர்கள் போக எஞ்சியுள்ளோர் போரிடமுடியாமல் தப்பி ஓடிவிட்டனர்.

தம்மை எதிர்த்துப் போரிடவும் அடியாரைப் போகவிடாமல் தடுத்து நிறுத்திடவும் இனியாரும் இல்லை என உறுதி செய்த பின்னர் இயற்பகையார் அருமறை முனிவரை நோக்கி நீங்கள் இருவரும் அஞ்சாமல் இந்தக் கானகத்தைக் கடந்து செல்லலாம்.நான் தொடர்ந்து காவலுக்கு வருகிறேன் என்று கூறினார்.

இவ்வாறு அவர்கள் மூவரும் ஒருவர் பின் ஒருவராகச் சென்று திருச்சாய்க்காடு என்னும் தலத்தருகே வந்து சேர்ந்தனர்.அங்கு வந்தவுடன் வேதியரும் இயற்பகையாரைப் பார்த்து நீவிர் உம் இல்லம் செல்லலாம் என்று கூறினார். நாயனாரும் அடியவரின் மலர்ப் பாதங்களில் வீழ்ந்து வணங்கி மூவுலகையும் வாழ்விக்க வந்த ஐயனே ! உமக்கு நேர்ந்த இடரைப்போக்கி உம் அருளைப் பெற்றேன் என்று கூறித் தம் இல்லத்தை நோக்கித் திரும்பி நடந்தார்.

யாவராலும் செய்வதற்கு அரிய செயலைச் செய்த தொண்டராகிய இயற்பகை நாயனார் மனைவியையும் சிவனடியாரையும் திரும்பிப் பாராது நடந்து சென்றார். அவர் செல்வதைப் பார்த்த மறையவன் மனம் மகிழ்ந்து "பொய் பேசி அறியாத புண்ணியன் ஆதலின் நம்மைத் திரும்பிக்கூடப் பார்க்காது போகிறான்" என்று பாராட்டி அந்த மெய் தரும் சிந்தையானை மீண்டும் அழைக்கத் தொடங்கினார்.

இயற்பகை முனிவா ஓலம் ஈண்டு நீ வருவாய் ஓலம்
அயர்ப்பு இலாதானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம்
செயற்கு அரும் செய்கை செய்த தீரனே ஓலம் என்றான்
மயக்கு அறு மறை ஓலிட்டு மால் அயன் தேட நின்றான்.
(பெ.பு.432)

திருமாலும் நான்முகனும் தேடியும் காண இயலாமல் நின்ற இறைவன் "இயற்பகை முனிவனே ஓலம்! தேடிவரும் அடியவர்கள் எல்லோருக்கும் அவர்கள் வேண்டியவற்றை எல்லாம் கொடுத்து மகிழ்வதில் என்றும் சோர்வு இல்லாதவனே! அன்புள்ளம் கொண்டவனே ஓலம் ! செயற்கரிய செயல்களைச் செய்த தீரனே ஓலம்!" என்று கூறினார். (ஓலம் என்றால் அபயம் என்று பொருள்).

அடியார் "ஓலம் ஓலம்" என்று அழைத்த பேரொலியைக் கேட்ட இயற்பகையார் அடியேன் வந்தேன் என்று ஓடோடி வந்தார். "முன்பு நடந்து முடிந்த போரில் பிழைத்தவர் யாரேனும் இருக்கிறார்களா? அவர்கள் திரும்பி வந்து உம்மைத் துன்புறுத்துகிறார்களா? அவர்களையும் வதம் செய்வேன்" என்று கூறிக்கொண்டே ஓடிவந்தார். சங்கினைக் குண்டலமாக அணிந்த சங்கரனும் தம் தெய்வத் திருவுருவத்தில் காட்சி தருவதற்காக மறைந்தார்.

ஓடோடி வந்த நாயனார் அங்கு அடியவரைக் காணாமல் அம்மையை மட்டும் கண்டார். அங்கு விண்ணொளியில் உமையவளுடன் இறைவன் இடப வாகனத்தில் காட்சி அளிப்பதைக் கண்ணுற்று நிலத்திலே பல முறை வீழ்ந்து வீழ்ந்து வணங்கினார்.

"இறைவனே! என்ன சொல்வது என்று அறியாது திகைத்து நிற்கின்றேன். விடையேறிய உமையொருபாகனின் திருக்கோலத்தைக் காண்பித்து எனக்கு அருள் செய்து உனக்குத் தொண்டு செய்யுமாறு என்னை ஆட்கொண்டவனே! எல்லை இல்லா இன்ப வெள்ளத்தை எனக்கு அருளியவனே! தில்லையம்பலத்துள் ஆடுகின்ற உன் திருவடிகளை வணங்குகின்றேன்" என்று இயற்பகையார் இறைவனைப் போற்றி வழிப்பட்டார்.

உடனே சிவபெருமானும் இயற்பகையாரை நோக்கி "எண்ணிய உலகில் எம்மிடம் இவ்வாறு நல்லன்பு செலுத்திய உம் செயலைக் கண்டு எல்லையற்ற மகிழ்ச்சியுற்றோம்! பழுது ஏதும் இல்லாப் பக்தனே! உம் மனைவியுடன் எம்மிடம் வருக" என்று அருள் பாவித்தார்.

இல்லை என்று சொல்லாது கொடுக்கும் இயற்பகைக்கும், கணவன் சொல்தட்டாத கற்பின் மிக்க அவர் இல்லதரசிக்கும் தம் உள்ளத்தில் ஊற்றெடுத்த அருளோடு வீடு பேறு அளித்துக் காளை வாகனனான கைலாசநாதன் பொன்னம்பலத்தினுள் புகுந்தான்.

வானவர்கள் பூ மழை பொழிய, வேதங்கள் முழங்க, ஞானத்தில் சிறந்த முனிவர்கள் போற்ற, ஊனம் இல்லாத் தொண்டினில் சிறந்த இயற்பகை நாயனார், சிவபெருமான் இருக்கும் தேவலோகத்தில், தம் இல்லதரசியுடன் சேர்ந்து வாழும் பேற்றினைப் பெற்றார். அவருடன் போரிட்டு இறந்த அவர் சுற்றத்தார் அனைவரும் வானுலகத்தில் வாழும் சொர்க்க நிலை பெற்றனர்.

இயற்பகை நாயனாரின் கதை ஓரளவு நெருடலானதேயாம். அவர் செய்தது நியாயம்தானா என்ற கேள்வி எழுபது இயற்கையே. பிறர் மனைவியை விரும்புவது பெறும் பாவம். அதைவிடக் கொடுமை அவ்வாறு விரும்பியவருக்குத் தம் மனைவியை மகிழ்வோடு தானே அளித்தது. பிறருக்கு அதிலும் சிவனடியார்களுக்குக் கொடுப்பதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டாலும் அதற்கும் ஓர் உலகியல் வரையறை உண்டு. இயற்பகையாரின் செயலை உலகியல் கண் கொண்டு பாராது அருளியல் கண் கொண்டு பார்க்க வேண்டும் என்று புலவர் வ.ஞானப்பிரகாசம் கூறுகிறார். (சேக்கிழார் காட்டும் திரு தொண்டு நெறி, பக்கம் 328)

சிவனடியார் "கேட்கக் கூடாத ஒன்றை கேட்டு விட்டார். கேட்டதில் வேண்டுமானால் குறை இருக்கலாம். அதுவும் கூடக் கேட்ட சொல் அளவில் தான் குறை, சிந்தையில் குறையில்லை, செயலில் குறையில்லை. ஏதாவது ஒன்று குறையா, நிறையா என்பதை அறியச் செயல் மட்டும் அளவன்று, அச்செயலின் நோக்கம் பற்றியும் ஆராய வேண்டும்" (பெரிய புராணச் சொற்பொழிவுகள் - சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி.)

இறைவனின் வண்ணம் தான் காமுகமாக இருந்ததே அன்றி அவர் எண்ணம் காமுகமாக இல்லை. அடியவர்கள் எதைக்கேட்டாலும் இல்லை என்று சொல்லாது ஈயும் இயற்பகையாரின் கொள்கையின் உறுதிப்பாட்டை உலகுக்கு உணர்த்தும் தூய எண்ணத்துடன் தான் அவர் மனைவியைக் கேட்டார். மனைவியைத் தானம் கொடுத்த சில மணித்துளிகளிலேயே இறைவன் இயற்பகைக்குக் காட்சி அளிக்கிறார்.

"இல்லையே எண்ணாத இயற்பகைக்கும் அடியேன்"

-சுந்தர மூர்த்திநாயனார், திருத்தொண்டத் தொகை

"செய்தவர் வேண்டியது யாதும் கொடுப்பச் சிவன் தவனாய்க்
கைதவம் பேச நின் காதலியைத் தருகென்றலுமே
மைதிகழ் கன்னியை ஈந்தவன் வாய்ந்த பெரும் புகழ் வந்து
எய்திய காவிரிப் பூம்பட்டினத்துள் இயற்பகையே"

-நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டர் திருவந்தாதி,

# கலிக்கம்ப நாயனார்

பெண்ணாகடம் என்ற பழமையான ஊரில் பிறந்தவர் கலிக்கம்ப நாயனார். அவ்வூர் நல்ல ஒழுக்கத்தோடும் அறநெறியோடும் தொன்மையான மரபுகளில் வழுவாது வாழ்கின்ற மக்கள் நிறைந்த ஊராகும். வானில் பவனி வரும் மேகங்கள் தங்குவதற்கு ஏற்ற பூஞ்சோலைகள் நிறைந்த வளமான ஊர் என்று பெண்ணாகடத்தைச் சேக்கிழார் வருணிக்கிறார்.

வளம்பொருந்திய இந்த மூதூரில் தன வணிகர் குலத்தில் பிறந்தவர் கலிக்கம்ப நாயனார். இவர் திருத்தூங்கானை மாடம் என்ற தளத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சிவக்கொழுந்து நாதரை வழிப்பட்டார். சிவனடியார்களுக்கு அமுது அளிக்கும் சேவை செய்து வந்தார். சிவப்பற்று அன்றி வேறு எவ்விதப்பற்றும் இல்லாதவராக விளங்கினார். கற்றைச் சடைமுடியுடைய சிவபெருமானின் திருவடிகளை நாள்தோறும் வணங்கி வழிப்படுவார். அவ்வூரில் திருத்தூங்கானை மாடம் என்னும் கோவிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் மீது நீங்காத பற்றுக் கொண்டவர்.

இவர் தம் இல்லத்திற்கு வரும் சிவனடியார்களின் திருவடிகளைக் கழுவி அவர்களுக்கு அமுதூட்டுவார். அவரது மனைவியார் வீட்டை விளக்கிச் சுத்தம் செய்து, அறுசுவை உணவுகளைச் சமைத்து அடியவர்களின் திருவடிகளைக் கழுவக் கரகத்தில் நீர் கொண்டு வந்து கணவருக்குக் கொடுத்து உதவுவார். இருவரும் அடியவர்கள் விரும்புகின்ற காய்கறி, நெய், தயிர், சுவையான பால், தேனினும் இனிய கனிகள், கரும்புக்கட்டி என விதவிதமான மேன்மையான உணவுகளை அடியவர்களுக்கு அளித்து விருந்தோம்புவர். அதன்பின் அவர்கள் மனம் மகிழுமாறு வேண்டிய அளவு நிதியும் அளிப்பர்.

ஒருநாள் இல்லத்திற்கு வந்த சிவன் அடியார்களுக்குத் தொண்டு செய்யும் பணியைக் கலிக்கம்பர் தொடங்கினார். அவர் துணைவியாரும் மனையைத் தூய்மை செய்து அறுசுவை உணவைச் சமைத்து அடியவர்களின் பாதங்களைக் கழுவுவதற்குக் கலசத்தில் நீர் கொண்டு வந்தார்.

அப்பொழுது அங்கு வந்திருந்த அடியவர்களைக் கவனித்த அம்மையார் அவர்களுள் ஒருவர் ஒரு காலத்தில் தம் வீட்டில் சில நாட்கள் பணிசெய்து விட்டுப் பின்னர் அந்த வேலையை வெறுத்துச் சென்றவர் என்று அறிந்தார். அவ்வாறு சென்ற பணியாள் இன்று எலும்பும் பாம்பும் அணிந்த சிவபொருமானின் அடியவர்களுள் ஒருவராக அங்கு நின்றார்.

இதைக் கண்டும் காணாத கலிக்கம்பர், அந்த அடியாரின் முறை வந்தவுடன் கழுவுவதற்காக அவர் பாதங்களைப் பற்றினார். பழைய நினைவுகளில் முடங்கிய அம்மையார், கரகத்தில் நீரை வார்க்கத் தயங்கினார். இதனைக் கண்ணுற்ற கலிக்கம்ப நாயனார் அம்மையாரின் கையிலிருந்த கரகத்தை வாங்கிக் கீழே வைத்தார். முன்பிருந்த நிலைமையை நினைத்து அடியவர்களை வழிபடாமல் இருப்பது தவறு. அடியவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் திருப்பாதங்களைக் கழுவ நீர் வார்க்க மனைவி மறுத்தாள் என்று கோபம் கொண்டு வாளை எடுத்து மனைவியாரின் கைகளை வெட்டினார். பின்பு கரக நீரைத் தன் கையினால் ஊற்றி அடியவரின் பாதத்தைக் கழுவினார்.

திருநீறு அணிந்த பின், முன்பு வேலைக்காரராக இருந்தாலும் அதைக் கருத்தில் கொள்ளாமல், இன்று சிவனடியாராக ஆனவரை இறைவனின் தொண்டராகக் கருதிப் பணிவிடை செய்து தொழ வேண்டும் என்பது கலிக்கம்ப நாயனாரின் கருத்து. அவருடைய இந்தக் கொள்கையில் இருந்து மாறுப்பட்டதால் மனைவி என்றும் பாராமல் நீர்வார்க்க மறுத்த அவர் கைகளைத் துண்டித்தார்.

அடியவர்கள் அனைவருக்கும் பாத பூஜை செய்தபின் திருவமுது படைத்தார். நெடுநாள் தம் தொண்டினைச் செய்து அரவத்தைக் கழுத்தில் அணிந்த ஆதியும் அந்தமும் இல்லா ஆனந்தக் கூத்தனின் திருத்தாள் சென்றடைந்தார்.

"கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன்"
அடியார்க்கும் அடியேன் – திருத்தொண்டத்தொகை

பொய்யைக் கடிந்து நம் புண்ணியர்க்கு ஆட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுருவாய் வரத் தானவன் தாழ் கழுவ
சைவத் தவர்முன்பு வெள்கி நீர்வாராவிட மனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணாகடத்துக் கலிக்கம்பனே.
–திருத்தொண்டர் திருவந்தாதி.

ooo

# மூர்த்தி நாயனார்

சங்கம் வைத்துத் தமிழ்வளர்த்த பழம்பெருமை வாய்ந்த பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரை மாநகரம், ஒளி மிகுந்த மணிமாடங்களைக் கொண்ட மாளிகைகளில் செல்வச் சிறப்பு மிக்க குடிமக்கள் வாழ்ந்து வந்தனர். சந்தனச் சோலை நிறைந்த பொதிய மலையிலிருந்து வீசும் சில்லென்ற தென்றல் காற்றினால் மதுரைமாநகரம் நிரந்தரமாகக் குளிரூட்டப்பட்ட நகரமாக விளங்கியது. தெய்வத் தமிழைப் போற்றி வளர்க்கும் திருத்தலமாகத் திகழ்ந்தது.

இத்துணை பெருமை மிகுந்த மதுரை மாநகரில் தாய்தந்தையர் செய்த தவப்பயனாய்த் தனவணிகர் குலத்தில் அவதரித்தார் மூர்த்தியார். அவர் அனைத்துப் பற்றுக்களையும் முற்றிலும் அறுத்தவர். சுற்றத்தையும் துணையையும் துறந்து வாழ்ந்த முனிவர். சிவபெருமானின் திருவடித்தாமரை அன்றி வேறெதையும் சிந்தையில் எண்ணாதவர். பெருமானிடம் பெருகிடும் அன்பே உருவமானவர். அவர்தான் மூர்த்தி நாயனார்.

பிறையைச் செஞ்சடை மேல் அணிந்த பெருமானாகிய சிவனுக்குத் திருமேனியில் பூசத் தினமும் சந்தனம் அரைத்துக் கொடுக்கும் திருத்தொண்டினைச் செய்வதையே வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்டவர். உலகையே காக்கும் பொன்னார் மேனியனின் திருமேனியில் சந்தனம் பூசிக் குளிர்வித்தால் அது அண்டத்தில் வாழும் அனைத்து உயிர்களையும் குளிர்விப்பது போலாகும் என்று எண்ணுபவர்.

கஸ்தூரி,கோரோசனம், குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் முதலிய நறுமணப் பொருள்களைக் கூட்டி இறைவனுக்கு ஒரு முறை சந்தனக்காப்புச் செய்தவர் கோடி வருடங்கள்மனம் தெளிந்தவராய்ச் சிவனடியில் இன்புற்று இருப்பார்கள் என்பது சிவபுண்ணியத் தெளிவு. (திரு முருக கிருபானந்த வாரியார்-சிவனருட் செல்வர்-பக்கம் 250).

இவ்வாறு இருக்கும் நாளில் மண்ணாசை கொண்ட வடுகக் கருநாட்டு மன்னன் ஒருவன் பாண்டி நாட்டின் மீது படையெடுத்து வந்தான். யானை, குதிரை, காலாட்படை எனக் கடல் போல வீரர்களைக் கொண்ட பெரும் படையால் பாண்டிய மன்னனைத் தோற்கடித்து மதுரையில் அமர்ந்து அரசாளத் தொடங்கினான்.சமண சமயத்தைச் சேர்ந்த அவன் சைவ நெறி நின்ற அடியார்களைத் துன்புறுத்தத் தொடங்கினான். திருவாலவாயினுள் எழுந்தருளியுள்ள முக்கண்ணனின் திருத்தொண்டரான மூர்த்தியாரையும் அவன் விட்டு வைக்கவில்லை.

முடிவில்லாத கொடுமைகளையும் தாங்கிக் கொண்டு மூர்த்தி நாயனார் சந்தனம் அரைத்துச் சடையனார்க்குப் பூசும் திருத்தொண்டைத் தொடர்ந்து செய்து வந்தார். அதனைக் கண்ட மன்னன் மூர்த்தியாருக்குச் சந்தனக் கட்டைகள் கிடைக்காதவாறு செய்தான். அடியவரும் புன்மைச் செயல்புரியும் சமண சமயத்தைச் சார்ந்த கொடுங்கோல் வடுக மன்னன் எப்போது மடிவானோ என்றும், திருநீற்றின் உயர்ந்த சைவ நன்னெறி நிற்கும் மன்னர் ஆளும் நாள் மறுபடியும் என்று வருமோ என்றும் எண்ணி மனம் மிக வருந்தினார். பகல் முழுதும் தேடி அலைந்தும் சந்தனக்கட்டைகள் கிடைக்காததால் மனம் சோர்வுற்றுச் சோமசுந்தரர் திருக்கோயிலை அடைந்தார்.

ஆடல் வல்லானின் மேனிக்குப் பூசிடும் சந்தனக் கட்டைக்குத் தானே முட்டு வந்தது. ஆனால் சந்தனத்தை தேய்க்கும் என் கைக்கு முட்டு வரவில்லையே என்று எண்ணிச் சந்தனம் அரைக்கும் வட்டமான பாறைக்கல்லில் தன் முழங்கையை வைத்துத் தேய்க்கத் தொடங்கினார்.

நட்டம் புரிவார் அணி நல் திரு மெய்ப்பூச்சு இன்று
முட்டம் பரிசு ஆயினும் தேய்க்கும் கை முட்டாது என்று
வட்டம் திகழ் பாரையின் வைத்து முழங்கை தேய்த்தார்
கட்டும் புறம் தோல் நரம்பு என்பு கரைந்து தேய

(பெ.பு.பாடல் எண்.992).

கையின் புறந்தோல் தேய்ந்து இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. நரம்புகள் தேய்ந்தன. அதன்பின் எலும்பும் கரைந்து தேய்ந்தது. மூளைக்குச் செல்லும் நரம்புகளும் வெளிப்பட்டன. தொண்டு செய்யும் அடியவர் படும் துயரத்தை மேலும் காணப் பொறுக்காத கருணைக் கடவுளான கயிலை நாதன் உடனே ஓர் அருள்வாக்கு அருளினார்.

"அன்பனே ! அன்பின் துணிவினால் உடலை வருத்தும் இந்தச் செயலை இனியும் செய்யாதே. உனக்குக் கொடுமை இழைத்த கொடிய வடுக மன்னன் எடுத்துக் கொண்ட நாடு முழுவதும் உன் ஆட்சியில் வரும். அநீதியைக் களைந்து நீதியை நிலைநாட்டி வழக்கமான திருப்பணிகளைத் தங்கு தடையின்றிச் செய்து முடிவில் சிவலோகம் வரக் கடவாய்" என்று அருள்வாக்கு ஒலித்தது.

அருள்வாக்கினைக் கேட்ட மூர்த்தியார் கை தேய்ப்பதை நிறுத்தினார். அவர் கையில் தேய்ந்ததனால் ஏற்பட்ட புண் மறைந்து கை முழுமை பெற்றது. நாயனாரும் ஒளியுடன் விளக்கமுற விளங்கினார்.

அன்று இரவே கொடுங்கோல் வடுக மன்னன் இறந்தான். மாண்ட மன்னனுக்கு மறுநாள் காலை உரிய ஈமச் சடங்குகளை அமைச்சர்கள் செய்தனர். மன்னனுக்கு வாரிசு எதுவும் இல்லை. நாட்டினை ஆள அரசன் ஒருவன் வேண்டும் என்று எண்ணிய அமைச்சர் பெருமக்கள் சொக்கநாதரை வழிபட்டுப் பட்டத்து யானையின் கண்களைத் துணியால் கட்டி அரசனைத் தேர்ந்தெடுத்து வருவதற்கு அனுப்பினர்.

கண்கள் கட்டப்பட்ட யானை மதுரை வீதிகளில் வலம் வந்து கோவிலின் வெளியே நின்று கொண்டிருந்த மூர்த்தி நாயனாரை வணங்கி அவரைத் தன் துதிக்கையினால் எடுத்து முதுகின் மேல் அமரச் செய்தது. அமைச்சர்கள் மூர்த்தி நாயனாரை மன்னராக ஏற்று அவரடியில் வீழ்ந்து வணங்கினர். சங்குகள் முழங்கின, தாரை தப்பட்டைகள் ஒலித்தன, வாழ்த்தொலிகள் விண்ணைப் பிளந்தன.

யானை மீது நகர்வலம் வந்து மூர்த்தி நாயனார் சபாமண்டபத்தை அடைந்தார். யானையின் மீதிருந்து இறங்கிய அவரை முடி சூடும் அறைக்கு அழைத்துச் சென்றனர். நவரத்தினங்கள் இழைத்த அரியாசனத்தில் அமர வைத்து முடி சூட்டுவதற்கு வேண்டிய சடங்குகளைச் செய்தனர்.

சிந்தை முழுவதும் சிவபெருமானையே நினைத்திருக்கும் மூர்த்தி நாயனார் அமைச்சர்களைப் பார்த்து "சமணம் நீங்கிச் சைவம் ஓங்கினால் தான் நான் அரசாட்சியை ஏற்பேன்" என்று கூறினார். அவர்கள் அனைவரும் அதற்கு இசைந்த பின் அவர் மேலும் கூறினார். "அடியேன் அரசு புரிய வேண்டும் என்றால் சிவபெருமான் திருமேனியில் பொலிவுறும் திருநீறே எனக்கு அபிஷேகப் பொருளாக இருக்க வேண்டும் . உலக நாயகனின் அடையாளச் சின்னமான உருத்திராட்சமே எனக்கு அணிகலனாக வேண்டும். சடைமுடியே என் அரசின் மணிமுடியாக இருத்தல் வேண்டும்" என்று கூறினார்.

மன்னரான மூர்த்தியாரின் மணிமொழிகளைக் கேட்ட அமைச்சர் பெருமக்களும் அவைப் பெரியோரும் அவ்வாறே நடப்பதாக உறுதிமொழி அளித்தனர். சொக்கநாதரைப் பணிந்து திருக்கோலேந்தி ஆட்சி பீடத்தில் அமர்ந்தார் மூர்த்திநாயனார். மீண்டும் சைவ நெறி தழைத்தது. திருநீற்று நெறி ஓங்கியது. வேற்றரசர்களும் சூழ்ந்து நின்று போற்றி வணங்கினர். தீமைகள் அகன்றன.

பிரமச்சரியத்தில் உறுதி பூண்ட மூர்த்தி நாயனார் திருநீறு- கண்டிகை (உருத்திராட்சம்) - சடைமுடி ஆகிய மூன்றையும் அணிந்து நெடுங்காலம் ஆட்சி புரிந்து சிவபெருமான் திருவடி நிழலை அடைந்தார்.

"மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்" என்று சுந்தர மூர்த்தி நாயனார் இவரை வணங்கினார். திருநீறு, கண்டிகை, சடைமுடி மூன்றும் மும்மையாகும்.

○○○

# நூல் மேற்கோள்


1. சேக்கிழார்
   – திருத்தொண்டர் புராணம் என்ற பெரியபுராணம்

2. புலவர் ப. ஞானப்பிரகாசம்
   – "சேக்கிழார் காட்டும் திருத்தொண்டு நெறி"

3. வ.த. இராமசுப்பிரமணியன்
   – "பெரிய புராணம் என்கிற திருத்தொண்டர் புராணம்–"

4. சரளா இராசகோபாலன்
   – "சமயம் வளர்த்த தமிழ்"

5. அ.ச. ஞானசம்பந்தன்
   – "பெரியபுராணம் – ஓர் ஆய்வு"

6. எம். வசந்தா
   – "கன்னடத்தில் காரைக்கால் அம்மையார்"

7. க.த. திருநாவுக்கரசு
   – "தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு"

8. மா. சிவகுருநாதப்பிள்ளை
   – "நாயன்மார்கள் வரலாற்றில் பல்வகைச் செய்திகள்."

9. நாகர்கோவில் கிருஷ்ணன்
   – "அருள்பெற்ற நாயன்மார்கள்."

10. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
    – "பெரியபுராணச் சொற்பொழிவுகள்.


OOO

# ஆன்மீக நூல்கள்

சிவ வழிபாடு
அர்ச்சனைக்குரிய 108 போற்றிகள்
சிவபுராணச் சிந்தனைகள்
பஞ்ச புராணத் திரட்டு
பாசுரப்படி ஸ்ரீமத் ராமாயணம்
கண்ணன் ஒரு சூத்ரதாரி
பகவத் கீதை முத்துக்கள்
திருக்குறள் முத்துக்கள்
தமிழர் திருமணம்
சிவாலய வழிபாடு
கந்தர் அனுபூதி(100 பாடல்கள்)
விரதங்கள்
ஷீரடி சாய்பாபா வழிபாடு
அறுபத்து மூன்று நாயன்மார் கதைகள்
துயர் துடைக்கும் மந்திரங்கள் (பேரா.அ.ச.ஞா.உரை)
ஸ்ரீ அனுமன் சாலீஸா
அருளும் பொருளும் தரும் அஷ்டலஷ்மி
ஸ்ரீ நாராயணீயம்(100 தசகங்கள்)
மனையடி சாஸ்திரம்
பதினெண் சித்தர்கள் வரலாறு
தமிழ் மருந்துகள்
கடுக்காய்
திரிகடுகம் எனும் சுக்கு மிளகு திப்பிலி
மகாத்மா காந்தியடிகள்-வாழ்க்கைக் குறிப்புகள்
மகாகவி பாரதியார்-வாழ்க்கைக் குறிப்புகள்
பாவேந்தர் பாரதிதாசன்-வாழ்க்கைக் குறிப்புகள்
சஞ்சீவி பர்வதத்தின் சாரல்



முல்லை
பதிப்பகம்
323/10,கதிரவன்காலனி, அண்ணா நகர் மேற்கு, சென்னை - 40
போன் : 2616 1196 / 9840358301 e -mail : mullaipathipagam@yahoo.com